# பட்டு மலர் மேனிக்கு
# பாவையர் நித்தம் விரும்பும்
# விநிபா
## சந்தன முக பவுடர்










சருமத்திற்கு மென்மையும், பொலிவும் அளிக்கவல்ல மைசூர் சந்தனம், இந்திய அபூர்வ மூலிகைகள், மேனாட்டு வாசனை திரவியங்கள், உயர்ந்த அத்தர் வகைகள், தூய புனுகு, ஜவ்வாது, அரகஜா இவற்றை ஒருங்கே கலந்து விஞ்ஞான ரீதியில் நவீன மைக்ரோஃபைன் முறையில் தயாரிக்கப்படுகின்றன.

**விநிபா ப்ராடக்ட்ஸ்**

'கோகுல் கார்டன்ஸ்' கும்பகோணம்.

Criterion VP 3510 TM

# Kalki Shopping Page

**sleek**

**Wall Fan**





**ALMONARD**
**- an unbeaten excellence**

**B. K. AGENCIES,**
No: 20 LUZ BAZAAR,
SHOPPING CENTRE,
R. K. MUTT ROAD, MYLAPORE
**MADRAS-600 004** Ph: 77683

**A New Bookshop in OLD MAMBALAM**



Books on Education, Religion, Comics for Children, Magazines, Novels and Stationery are all available

# BHAVANI BOOK CENTRE

(Prop: M. S. ARUNACHALAM)
Opp: State Bank of India

Station Road,
West Mambalam,
**MADRAS-600 033**

**அலை அலையாய் வண்ணங்கள்!**
**அழகழகாய் டிசைன்கள்!**



கலையாத மையிடும் பெண்ணே!
**காஞ்சி சில்க்** தரும் பட்டுச்சேலைகளின் தனிச்சிறப்புத்தான் என்னே! **காஞ்சி சில்க்** பட்டுச் சேலைகள் கலைநயமுடையவை! விலை நியாயமானவை! நீடித்து உழைப்பவை! நிறைவு தருபவை! இன்னும் நவீன மில் துணி வகைகள்! நயமான கைத்தறி ரகங்கள்!

# காஞ்சி சில்க் பேலஸ்

**6/53, பாண்டிபஜார், தி. நகர், சென்னை-600 017**

---

எந்த சேலைக்கும் மேட்ச் ஆகும் சோளிகள் எங்களிடம் உண்டு.
எந்த சோளிக்கும் மேட்ச் ஆகும் ஸ்லீவ்ஸ் ஏராளம் உண்டு.

RAJATHI

# மகளிர் ஸ்பெஷல்!


எனக்கும் உங்க கையாலே ஒரு கோன் ஐஸ்க்ரீம் வாங்கிக் கொடுங்களேன்!


மாங்கல்யம் தந்துநுனே.. மம..


பழமை பேணி புதுமை புகுத்தல் வேண்டும்!


உனக்கென்ன லேடி டைப்பிஸ்ட் கிட்ட ஜாலியா இருக்கே! நான் இந்த கட்டெழுத்தாளர் கிட்ட அவதிப்படுகிறேன்!


ஸார்.. பூ வேணுமா?


சர்க்கஸ்லே அவ்ளோ பெரிய யானையை எப்படி பழக்கறீங்க?
உங்கம்மா என்னைப் பழக்கல்லியா.. அந்த மாதிரி தான்!



# கல்கி - சாரதா'ஸ்

## பட்டுப்புடவைகள் பரிசுத்திட்டம்



கல்கி வாசகப் பெண்மணிகள் மட்டுமே கலந்துகொள்ள ஓர் எளிய இனிய பரிசுத் திட்டம் இது.

இந்த வாரம் தொடங்கி வரிசையாக எட்டு வாரங்களில் — எட்டு கல்கி இதழ்களில் — எட்டு கேள்விகள் இடம்பெறும். கூடவே ஒவ்வொரு கேள்விக்கும் மூன்று விடைகள் தரப்படும். எந்த விடை மிகவும் பொருத்தமானது என்று நீங்கள் கருதுகிறீர்களோ, அந்த விடையைக் குறித்து வைத்துக் கொள்ளவும். ஒன்பதாவது வாரம் அதாவது ஏப்ரல் 13ந் தேதி கல்கி சித்திரைச் சிறப்பிதழில் இடம்பெறும் கூப்பனில் நீங்கள் தேர்ந்தெடுத்த விடைகளை அந்தந்தக் கேள்விக்கு நேரே எழுதவும். தனித் தாளில் எழுதி அனுப்பினால் நிராகரிக்கப்படும்.

அத்துடன் கல்கி, சாரதா'ஸ் இரண்டும் பற்றி இரண்டு விளம்பர வாசகங்களை நீங்கள் கூப்பனிலேயே தெளிவாக அதற்குரிய இடத்தில் எழுத வேண்டும். விளம்பர வாசகங்களை நீங்கள் இப்போது முதலே யோசித்து வைக்கலாம். ஓர் உதாரணம்:

**கல்கி** கையிலிருந்தால் பெருமை;
படித்துப் பார்த்தால் அருமை!

குமாரி ஜெயலலிதா எட்டு கேள்விகளையும் பதில்களையும் பரிசீலித்து விடைகள் தேர்ந்தெடுத்துத் தந்துள்ளார். அவருடைய விடைகளுடன் ஒத்துப் போகிற மாதிரி எட்டுக் கேள்விகளுக்கும் சரியான விடைகளை அளித்த பெண்மணிக்கு முதல் பரிசு ரூ. 750 பெறுமானமுள்ள சாரதா'ஸ் பட்டுப் புடவை வழங்கப்படும். ஒரு தவறு அல்லது இரு தவறுகளுடன் எழுதிய பெண்மணிகளுக்கு முறையே இரண்டாவது, மூன்றாவது பட்டுப் புடவை பரிசுகளும் உண்டு. முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசு பெறும் தகுதியுடன் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் சரியானபடி விடைகள் எழுதியிருந்தால் பரிசுக்குரியவர் விளம்பர வாசகத்தின் சிறப்பை வைத்துத் தேர்ந்தெடுக்கப்படுவர்.

விளம்பர வாசகங்களைப் பயன்படுத்திக்கொள்ளும் முழு உரிமையும் கல்கி — சாரதா'ஸ் நிறுவனங்களையே சேரும். இதற்குத் தனியே சன்மானம் கிடையாது.

ஆறுதல் பரிசுகளாக இருநூறு பேருக்கு ஜூலை மாதம் முடிய மூன்று மாதங்களுக்கு கல்கி பிரதிகள் இலவசமாக அனுப்பப்படும். ஏற்கனவே கல்கிக்கு நேரடி சந்தாதாரராக இருப்பவருக்கு அவருடைய சந்தா காலம் மேலும் மூன்று மாதங்களுக்கு நீடிக்கப்படும். இந்த ஆறுதல் பரிசுக்குரியவர்கள் குலுக்கல் முறையில் முதலிலேயே தேர்ந்தெடுக்கப்பட்டு விடுவார்கள். அதன் பின்னரே விடைகள் பரிசீலனை தொடங்கும். ஒருவேளை ஆறுதல் பரிசு பெற்றவரே முதல் அல்லது இரண்டாவது மூன்றாவது பரிசைப் பெற நேர்ந்தால் அவருக்குப் பதில் ஆறுதல் பரிசுக்கு வேறு ஒருவர் அதிர்ஷ்டக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படுவார்.

இந்நடவடிக்கைகள் அனைத்தையும் குமாரி ஜெயலலிதா மேற்பார்வையிட்டு ஆறுதல் பரிசுக்குரியவர்களையும் தேர்ந்தெடுப்பார்.

**முடிவு தேதி ஏப்ரல் 22**

உறையின் மேல் ''கல்கி-சாரதா'ஸ் பட்டுப் புடவைப் பரிசுத் திட்டம்'' என்று குறிப்பிட்டு, ''ஆசிரியர் கல்கி, சென்னை—32'' என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.

வேறு கடிதப் போக்குவரத்துக் கிடையாது.

சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

இந்த வாரத்திய கேள்வியும் விடைகளும்:

**கேள்வி: பெண்ணுக்கு முக்கிய அணிகலன் எது?**

**விடைகள்: நளினம் - நிதானம் - நாணம்.**



# சாகித்ய அகாதமிக்கு வேண்டுகோள்: "பெண்ணினத்தை அவமதிக்காதீர்கள்!"

இதுவரை சாகித்ய அகாதமியின் ஆலோசனைக் குழு உறுப்பினராக இருந்த திருமதி ராஜம் கிருஷ்ணன் திடீரென்று ராஜினாமாச் செய்துள்ளார். இதைப் பற்றி அவரிடம் விளக்கம் கேட்ட போது:

**சா**கித்ய அகாதமியின் பரிசு கொடுக்கும் முறையில் குறை இருப்பதை உணர்கிறேன். சாகித்ய அகாதமிக்கு வேண்டியவர் — வேண்டாதவர் என இரு வகைகளாக அவர்கள் பிரிப்பது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

1977ம் ஆண்டு தமிழில் சாகித்ய அகாதமிப் பரிசு எந்தப் புத்தகத்துக்கும் கிடைக்கவில்லை. ஏன், தமிழகத்தில் தகுதி வாய்ந்த எழுத்தாளர்களே இல்லாது போய்விட்டார்களா? நினைத்தாலே மனத்தை என்னவோ செய்கிறது. இதை ஒரு பத்திரிகை ''தமிழ் எழுத்தாளர்களுக்குக் கிடைக்க வேண்டிய பணத்தை எல்லாம் அந்த ஆண்டு அகாதமி ஏப்பம் விட்டு விட்டது'' என்று எழுதியிருந்தது.



இந்தியா போன்ற ஒரு மாறிவரும், வளரும் சமுதாயத்தில் இலக்கிய ஆசிரியர் மிகப் பொறுப்பான வலுவான படைப்புகளை உருவாக்க வேண்டியவராய் இருக்கிறார். Art for Art sake என்று சொல்வது அபத்தம். இப்போது இந்தப் போர்வையில் வரும் புத்தகங்கள் பெண்களை ரொம்பவும் கேவலமாகச் சித்திரிக்கின்றன. இந்த அளவுக்குப் பெண்கள் இன்னும் தாழ்ந்து போகவில்லை. இதுபோன்ற 'கலை' இலக்கியங்களை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். மக்கள் மனத்தை இவைபோன்ற எழுத்துக்கள்தாம் பாழ்படுத்துகின்றன.

சாகித்ய அகாதமி தரும் பரிசு ரூ. 5000 என்றாலும் தேர்ந்தெடுக்கப்படும் புத்தகம் அதைவிடப் பன்மடங்கு மதிப்புள்ளதாய் இருக்க வேண்டும். சாகித்ய அகாதமி ஒரு தனிப்பட்ட அமைப்பல்ல. தேசிய நிறுவனம். அது நமது நாட்டின் ஒழுக்க மேம்பாட்டையும், பண்பையும், கலாசாரத்தையும் பிரதிபலிக்கும் உயர்ந்த எழுத்துக்களையே கௌரவிக்க வேண்டும்.

1979ம் ஆண்டு சாகித்ய அகாதமி விருது கொடுக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட தி. ஜானகிராமனின் ''சக்தி வைத்தியம்'' சிறுகதைத் தொகுப்பு 1978ம் ஆண்டு தேடிப் பிடித்துப் பிரசுரிக்கப்பட்டுள்ளது. இதில் அடங்கியுள்ள கதைகள் ஏற்கனவே 1956 முதல் 1970 வரை அவர் எழுதிப் பிரசுரமானவை. விசித்திரமாக இருக்கிறதல்லவா? சாகித்ய அகாதமி விதிகளின்படி எந்த ஆண்டு பரிசு கொடுக்கப்படுகிறதோ, அதற்கு முந்தைய மூன்று ஆண்டுகளில் எழுத்தாளர்களின் படைப்புக்களே பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட வேண்டும்.

சக்தி வைத்தியம் புத்தகத்தில் முக்கால்வாசி பக்கங்களை ஆக்கிரமித்துக்கொள்வது (63 பக்கங்கள்) ''வீடு'' என்ற கதை. ஒரு டாக்டரின் மனைவி, அவரது கம்பவுண்டரிடம் சோரம் போகிற ''இலக்கியம்''! தலைப்புக் கதையான ''சக்தி வைத்தியம்'', படித்துச் சுயமரியாதையோடு இருக்கும் பெண்ணை ரொம்பவும் தாக்கி, ஏன் கேலி செய்யும்கூட எழுதப்பட்டுள்ளது. பெண்ணைப் பிள்ளை பெறுவதற்கும் ரசம் வைப்பதற்கும் மட்டுமே உரியவள் என்று சொல்கிறது.

இதுபோன்ற கதைகளுக்கு இலக்கிய முத்திரை குத்திப் பரிசு கொடுக்கும் குழுவில் நான் இருக்க விரும்பவில்லை. இதனால் தான் ராஜினாமா செய்தேன். இதுபோன்ற கீழ்த்தரமான 'இலக்கியங்கள்' பெண்கள் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையாக இருக்கின்றன என நான் நம்புகிறேன். நாம் பெண்களைப் போற்றுவது உண்மையெனில் இது போன்ற இலக்கியங்களைப் பெருக விடலாமா? நான் விலகியதால், ஒரு முட்டுக்கட்டை குறைந்தது என நினைத்து, அகாதமி இதே போக்கில் தொடர்ந்து நடந்துகொண்டால் அது இலக்கியத்துக்குத் துரோகம்; பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதி.

—பேட்டி: ''சிக்கி''

> கல்கியில் வந்து கொண்டிருக்கும் வழக்கமான தொடர் அம்சங்கள் சில அடுத்த வாரம் இடம் பெறும். - ஆர்.

---

பெண், ஒன்று ஒரேடியாக அன்பு செலுத்துவாள் அல்லது ஒரேடியாக வெறுப்பாள். நடுத்தரமாக இருக்கப் பெண்ணுக்குத் தெரியாது.

-சைரஸ்

தெய்விகமான நல்ல இசையைக் கேட்கச் சந்தர்ப்பம் வாய்த்தால் விடமாட்டேன். அது கர்நாடக இசையாயிருந்தாலும் சரி, சினிமா பாடலாயினும் சரி, அபஸ்வரம் மட்டும் இல்லாமலிருந்தால் போதும். நான் சமீபத்தில் கேட்டது பாலசுப்பிரமணிய சங்கீத சபாவின் ஆதரவில் அவர்களுடைய இசைப் பள்ளி நிதிக்காக மியூசிக் அகாடமி அரங்கில் நடந்த பண்டித ரவிசங்கரின் கச்சேரிதான். இந்தக் கச்சேரியைப் பற்றிக் கூறுவதற்கு முன் ஒரு வார்த்தை. நான் ரசிகைதானே யொழிய விமர்சகி அல்ல. ரவிசங்கர் தமது இசை வாழ்க்கையின் தலைசிறந்த நாட்களில் இருக்கிறார் என்பதைத்தான் அன்றையக் கச்சேரி உணர்த்தியது. அன்று அவர் வாசித்த ராகங்கள் மூன்றுதான். வசந்த் பஞ்சம்; மஞ்ஜ் கமாஸ்; சிந்துபைரவி. இடைவேளைக்கு முன் இரண்டு, பிறகு சிந்து பைரவி. முதலில் விச்ராந்தியான ஆலாபனை. பிறகு தாளம் இணைய படிப்படியாக விறு விறுப்பு கூடி கடைசியில் ரசிகர் நாற்காலியில் சாய்ந்து உட்கார விடாமல் ஓர் உச்ச கட்டம்! சிறிதும் பிசிறு தட்டாத தாளக் கட்டு! ஸிதாருக் குத்தான் எவ்வளவு கலகலவென்ற இனிய ஒலி! அன்று வாசிப்பில் எனக்கு மிகவும் பிடித்தது சிந்து பைரவிதான். பல்வேறு ராகங்களின் ஜீவனை ராகமாலிகை ஸ்வரப்பிரஸ்தாரத்தில் காண்பித்தது பிரமிக்க வைத்தது. ரசிகர்கள் அடக்கிக் கொள்ள முடியாமல் இடை இடையே கரகோஷம் எழுப்பினார்கள். நிகழ்ச்சி முடிந்த பிறகோ திரை விடவும் முடியாமல் அவர்கள் கரவொலி நீண்டது! 'பல காலத்துக்குப் பிறகு' சென்னை பெற்ற பாக்கியம்' என்றுதான் அன்று ரசிகர்கள் எண்ணியிருப்பார்கள்.

லவ-குசர்களைப் போல் அல்லா ரக்காவின் தபேலா வாசிப்பு இல்லாமல் பண்டிட் ரவிசங்கரின் கச்சேரியைக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. அவர் விரல்கள் தாம் பறந்தபடியே மலரில் மது மாந்தும் தேன் சிட்டின் இறக்கைகள் போல் எவ்வளவு துரிதமாக இயங்குகின்றன! அதில் எத்தனை விதமான ஜாஜ்வல்யமான நாதவண்ணங்கள்! மாயா ஜாலம் போல் தீர்மானங்கள் எவ்வளவு கச்சிதமாகக் கணம் பிசகாமல் வந்து அடிபணிந்து நிற்கின்றன! ஒலிபெருக்கி அமைப்பு பற்றி விசேஷமாகக் குறிப்பிட வேண்டும். தபேலா வாசிப்பின்போது விரல்கள் எழுப்பிய சிறு நாதம் கூடக் காதில் மிகத் தெளிவாக விழுந்தது. ஹிந்துஸ்தானியின் ரூபக தாளம் ஏழு அட்சரங்களைக் கொண்டது. பலபேர் சரியாகத் தாளம் போட முயன்று தோல்வியுற்றனர் — என்னைப் போல.

ரவிசங்கர் தமது சிஷ்யருக்குக் கொடுத்த வாய்ப்பு எனக்கு மிகவும் மன நிறைவைத் தந்தது. உலகப் புகழ் பெற்ற ரவிசங்கருக்கு ஒவ்வொரு ஊரிலும் ஒரு சிஷ்யர். கல்கத்தாவைச் சேர்ந்த தீபக் சௌத்ரி வந்திருந்தது மட்டுமல்ல, வாசிக்கவும் செய்தார். இல்லை, இல்லை. ரவி அவரை வாசிக்க வைத்துக் கை தட்டலையும் பெற்றுக் கொடுத்தார்! இந்தத் தாராள மனப்பான்மை எல்லாப் பெரிய கலைஞர்களிடமும் வளர வேண்டும்.

''எட்டு மணிக்குக் கச்சேரி ஆரம்பம். ஏழே முக்கால் மணிக்கே தயவுசெய்து இருக்கையில் அமர்ந்து கொள்ளுங்கள்'' என்ற கோரிக்கையை மதித்துச் சென்றவர்களில் நானும் ஒருத்தி. ஆனால் 8—20க்குத்தான் திரை தூக்கப்பட்டது. அதற்குப் பிறகும் 20 நிமிடம் தம்புரா, ஸிதார் சுருதி சேர்க்கும் படலம்தான். என்ன தான் பெரிய வித்வானாக இருந்தாலும் இப்படி இட்டத்தட்ட அரை மணி நேரத்துக்கு மேல் சோதிக்கக் கூடாது. கொஞ்சம் முன்னாலேயே சுருதி சேர்த்துக் கொண்டிருந்தால் தான் என்ன? என் அருகில் இருந்த ஒருவர் ''ஆரம்பிப்பதற்கு முன்பு தான் இந்த அவஸ்தை. வாசிக்க ஆரம்பித்து விட்டால் அவரது இசை நம்மை மெய்மறக்கச் செய்து பகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்திவிடும்'' என்றார்.

உண்மைதான்.

பேட்டி: ருக்மிணி ராமச்சந்திரன்




துர்க்மான் கேட் சுல்தான்பூர் கறைகள்
நாராயண்பூர் அம்பலங்கள்
துர்க்மான் கேட் சுல்தான்பூர் சம்பவங்கள்
நாராயண்பூர் கறைகள்
உ.பி. முதல்வர்


மரணத்தில் இயற்கைன்னு செயற்கைன்னு.. என்ன உளறிட்டிருக்கீங்க?... எல்லாமே நான் தான்!
ஆட்சி உரிமை
Rama.


எம்.ஜி.ஆர் டிஸ்மிஸ்... டிஸ்மிஸ்...
தி.மு.க. கூட்டு தொடரும் தொடரும்..
செய்தி

1980 பிப்ரவரி 17
சித்தார்த்தி மாசி 5
மலர்: 38 இதழ்: 29



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# மடமையைக் கொளுத்துவோம்!

“உங்கள் மனைவியின் தோள் மீது நீங்கள் கை போட்டுக் கொண்டால் படம் இயற்கையாயிருக்கும்'' என்றார் புகைப்படக்காரர். ''அதைவிட பர்ஸ் உள்ள என் பாக்கெட்டில் அவள் கைபோட்டுக் கொண்டால் இன்னும் இயற்கையாக இருக்குமே'' என்றார் கணவர்! —இதுபோன்ற ஜோக்குகள் ஒன்றா இரண்டா? பெண் குலத்தை இழிவு படுத்துகிற மாதிரி எத்தனை எத்தனை எழுதப்படுகின்றன! ஏதோ நகைச் சுவைதானே விட்டுத் தள்ளலாம் என்றால், ஆபாசக் கதைகள், விளம்பரங்கள், சினிமாக்கள் முதலியவற்றில் பெண்களைப் போகப் பொருளாகவும் கவர்ச்சிப் பொருளாகவும் வியாபாரப் பொருளாகவும் பலவீனமானவர்களாகவுமே சித்திரிப்பது என்றைக்கு நிற்கப் போகிறது? புதிய சிகரெட் ஒன்றை அறிமுகப்படுத்தும் விளம்பரத் தொடரில் ஒரு பெண்ணின் ஆடையில் உள்ள 'ஜிப்'பைப் படிப்படியாக ஆண்மகன் இழுத்துப் பிரித்து அவளை வெற்றுடம்பாக்குவதாகக் காட்ட வேண்டிய அவசியம் என்ன?

இவற்றிலெல்லாம்தான் பெண்களைப் பலவந்தப்படுத்துகிற குற்றங்கள் அதிகமாகின்றன என்று நிரூபிக்க முடியாது போனாலும் . இவையும் ஒரு காரணம் என்பதை மறுப்பதற்கில்லை. உடலால் கற்பழிக்கிற அளவுக்குப் போகாவிட்டாலும் வார்த்தைகளால் கற்பைக் களங்கப்படுத்துகிற 'ஈவ் டீஸிங்'கில் ஈடுபடத் துணிபவர் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போகிறதல்லவா?

'உமன்ஸ் லிப்' என்றால் 'பிரா' அணியாதிருக்கவும் ஆண்மகன் போல் உடையணியவும் சுதந்திரம் வேண்டும் எனப் பெண்கள் கோருவதாக அதையும் கேலி செய்துவிடுகிறது சமூகம். அந்தக் கோரிக்கைகள், உமன்ஸ் லிப் இயக்கத்தின் ஒரு வெளிப்பாடே என்பதைப் புரிந்து கொள்ள மறுத்து, 'இயக்கமே இவ்வளவுதான்' என்று அலட்சியமாக ஒதுக்கி விடுகிறது.

ஒரு பெண்மணி தேசத்தின் பிரதமராகி விட்டால் மாதரை மதித்ததாகி விடுமா? கடைசியாக எடுத்த ஜனசங்கியைக் கணக்குப்படி 214 மிலியன் பெண்கள் கிராமங்களில் வாழ்கின்றனர். இவர்களில் 13 சதவிதமே எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள். பட்டணங்களில் வாழும் 50 மிலியன் பெண்களில் 42 சதவீதத்தினரே எழுதப்படிக்க அறிந்தவர்கள். என்று இந்நிலை மாறும்?

பெண்களை வேலைக்கு வைத்துக் கொள்வது அதிகமாகி வருவது மகிழ்ச்சியான விஷயம் தான். ஆனால் அவர்களுடைய விசுவாசத்தையும் திறமையையும் மதித்தா வேலைக்கு வைத்துக் கொள்கிறார்கள்? மாதச் சம்பளமோ, தின, வாரக் கூலியோ ஆண்மகனுக்குத் தருவதைவிடக் குறைத்துக் கொடுக்கலாம் என்ற பேராசையால்தானே? அதோடு போயிற்றா? ''பெண் பிள்ளைங்கன்னா நிம்மதி ஸார்! வேலையுண்டு தானுண்டுன்னு இருப்பாங்க. கோ ஸ்லோ, ஸ்டிரைக், கேரோ போன்ற வம்பு தும்புக்குப் போக மாட்டாங்க'' என்று எத்தனை முதலாளிகள் கூறக் கேட்டிருக்கிறோம்?

இரு தாரத் தடை சட்டம் என்று ஒன்று இருக்கிறது. அது சமூகத்தில் ஒரு பெரும் பகுதியினரைப் பாதிப்பதே இல்லை. பாதிப்பதாக உணர்பவர்களில் பலரும் மறு மணத்துக்கு மனைவியிடம் எழுத்து மூலம் அனுமதி பெறத் தயங்குவதே இல்லை.

குழந்தைகளைப் பெற்றுத் தள்ளும் இயந்திரங்களாகப் பெண்கள் கருதப்பட்டு வந்த கொடுமை மிக்க காலம் போக இன்று குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் பிரபலமடைந்து வருகின்றனவே என்று திருப்தி அடைய முடிகிறதா? அதுவும் இல்லை. காரணம், குடும்பக் கட்டுப்பாடு முறைகளை—சஸ்திர சிகிச்சையானாலும் சாதனங்களைப் பயன்படுத்துவதானாலும்—ஆண்மகன் கடைப்பிடிப்பதே எளிது; பெண்களுக்கு இவை சித்திரவதை என்பதை மிகப் பெரும்பாலோர் உணர்வதில்லை.

மதுவிலக்கு என்ற ஓர் ஆறுதலாவது தமிழகத்தில் பெண்களுக்கு இருந்து வந்தது. அதையும் தளர்த்தி விட்டார்கள் புண்ணியவான்கள். வீட்டுக்கு வீடு இனி பெண்கள் படப் போகிற அவதி சொல்லி மாளாது. எவ்வளவோ அறிஞர்கள் எத்தனையோ வேப்பிலை அடித்தும் வரதட்சிணைப் பேயை விரட்ட முடியவில்லை என்பது மட்டுமல்ல; திருமணமான பின்பும் புகுந்த வீட்டாரின் புதுப் புது நிபந்தனைகளும் அவமதிப்புகளும் பெண்ணைப் பின்தொடர்கின்றன. மலட்டுத்தனம் என்பது பெண்களுக்கு மட்டுமே ஏற்படக் கூடியதல்ல, கணவனும் மலடாக இருக்கலாம் என்ற விஞ்ஞான உண்மை கூட இன்னும் பலபேர் அறிவுக்கு எட்டவில்லை.

விபசாரம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. விபசாரி என்று கேவலமாகக் கருதுகிறோமே யொழிய அவளை அந்த இழிநிலைக்கு ஆளாக்கியவனைப் பற்றி நினைத்துக் கூடப் பார்ப்பதில்லை. ''மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்'' என்றார் பாரதியார். என்றைக்கு அவர் ஆணையை நிறைவேற்றப் போகிறோம்?

---

பெண்களால் அன்பைப் பிரிக்க முடியாது: பெருக்கத்தான் முடியும்.
—காந்திஜி



● ஆர். எஸ். எஸ். தலைவர் திரு தேவரஸ் அவர்கள் பேட்டியிலிருந்து ஆர். எஸ். எஸ். பற்றி மக்கள் புரிந்து கொள்வார்களென்று நினைக்கிறேன். இந்தியா ஒருமைப்பாட்டுக்காகவும், ஹிந்து கலாசாரத்துக்காகவும் உழைக்கும் இப்படிப்பட்ட இயக்கத்தை வளர்க்கப் பாடுபடுவது ஒவ்வொரு இந்தியனின் கடமையாகும்.

விஜயவாடா — கா. சுப்பிரமணியன்

● கவாஸ்கர் ராஜினுமா பேட்டியில் அவரின் பேட்டியும் அருமை. அதிலும் எம்.ஜி. ஆரின் பேட்டியில் புல்ஸ்டாப்பே இல்லாமல் கடைசிவரை சென்று முடிவில் வைத்திருக்கிறீரே.... பலே ஆளய்யா நீர்!

திருக்கோயிலூர் — வி. ராமசுவாமி

● தங்களின் தலையங்கம் ''அமைச்சரவை என்ன விலை''க்கு என்ன விலை வேண்டுமானாலும் கொடுக்கலாம். தலைவர்கள் என்று கூறிக்கொள்ளும் இவர்கள் தேசத்தைப் பற்றியோ, மக்களைப் பற்றியோ கவலைப்படவில்லை. தாங்கள் நன்றாக வாழவேண்டும் என்ற ஒரே குறிக்கோள்தான் இவர்களுக்கு.

டால்மியாபுரம், சி.ஆர். திருவேங்கடத்தான்

● வெங்காயம், தங்கம், கெரஸின் விலைகளைச் சொல்லி ஆட்சிக்கு வந்தவர்கள் அமைச்சரவைகளை விலை பேசுவது வியப்பில்லை!

செங்கவல்லி — கி. முருகவேள்

● தங்கள் 3—2—80 இதழ் தலையங்கத்தைப் படித்துப் பார்த்தேன். தாங்கள் ஏன் ஒரு தலைப்பட்சமாக எழுதுகிறீர்கள் என்பது எனக்குப் புரியவில்லை.

காரமடை. — ஈ.பி. பரதன் சங்கர்

● கல்லூரியில் குவிஸ் நிகழ்ச்சியில் இரண்டாவது கேள்விக்குக் கூறிய பதில் தவறாகும். மாநில முதலமைச்சர்களாக இருந்தவர்கள் நந்தினி சத்பதியும், சுசேதா கிருபளானியும். கோவா மாநில அந்தஸ்தை இன்னும் பெறவில்லை. அது யூனியன் பிரதேசமே.

தூத்துக்குடி — வெங்கடேஸ்வரன்

● கபில்தேவை காவ்ரியும் விசுவநாத்தும் அலாக்காகத் தூக்கும் புகைப்படம் பிரமாதம். ஆட்டக்காரர்களின் முகங்களை அற்புதமாக வரைந்து தள்ளியிருக்கிறார் தாணு.

சென்னை-5 — எஸ். வி. ராஜசேகர்

● வட்ட மேஜையில் கும்பகோணம் ரகுபதியும், சேலம் அர்த்தநாரீஸ்வரனும் ஆபாசத்தை அழியாத கோலங்கள், ஐம்பது திரைப் படங்களில் கண்டு கண்டனக் கடிதம் வரைந்திருப்பதைக் கண்டேன். மனத்துக்குள் சிரித்துக்கொண்டேன். இந்த 'செக்ஸ்' யுகத்தில் இப்படியும் சிலரா?

மதுரை-1 — கலைக்கண்ணன்

● ஒருவர்: ''என்ன லைப்ரேரியன் சார், பத்திரிகைகளுக்கெல்லாம் ''ஜோக்'' எழுதறீங்களாமே?''

''ஆமாம்! ஏன்?''

''அதான் உங்க லைப்ரரிலே ஒன்று விடாம எல்லா ஷெல்ஃபுலேயும் ஒரே 'ஜோக்' புஸ்தகமா அடுக்கி வெச்சிருக்கீங்க!''

—உ. ராஜாஜி மன்னிக்க!

சென்னை-5 — வெ. சீதாராமன்

● 20—1—1980 கல்கி இதழில் ஒரு துணுக்கு மன்னரைக் கேலியாகப் புகழ்ந்து எழுதிய தமாஷை மிகவும் ரசித்துப் படித்தேன். வெ. சீதாராமன், உ. ராஜாஜி இருவரின் காட்டிலும் உண்மையிலேயே சிரிப்பு மழை நன்றாகத்தான் பெய்து கொண்டிருக்கிறது!

விழுப்புரம், — ஆர். மார்க்கண்டன்

● சுதந்திரம் பெற்றதிலிருந்து மத்தியில் அமைந்த அரசுகள் அனைத்தும் சிறுபான்மை அரசுகளே. எப்படியெனில், எந்த அரசும் பதிவான வாக்குகளில் ஐம்பது சதவீதம் கூடப் பெறவில்லை. இன்றைய அரசு 42.58 சதவீதம் வோட்டுக்களையே பெற்று 67 சதவீதம் ஸ்தானங்களைப் பிடித்துள்ளது. இது மக்களின் அபிப்பிராயத்தைச் சரியாகப் பிரதிபலிக்கவில்லை. இந்நிலை மாற விகிதாசாரப் பிரதிநிதித்வ முறை வரவேண்டும். இத்தேர்தலில் வோட்டளித்தவர்களில் ஐம்பது சதவீதத்தினருக்கு நாடாளு மன்றத்தில் இன்று பிரதிநிதிகளே இல்லை என்பதை கம்ப்யூட்டர் அலசி அறிவிக்கிறது. ஆகவே இத்தேர்தல் முறையைத் திருத்தியே ஆகவேண்டும்.

பம்பாய்-1 — எம். ஆர். பாய்

● நெய்வேலியில் புல்லாங்குழல் தெரு, தம்பூராத் தெரு என்று இருப்பது போல் திருநெல்வேலி மாவட்டம் பாளையங்கோட்டைப் பகுதியில் தெருக்களின் பெயர்கள் திருஞானசம்பந்தர் தெரு, பத்தராய் பணிவார் தெரு, மெய்ப்பொருள் நாயனார் தெரு, சாக்கிய நாயனார் தெரு என்றெல்லாம் உள்ளன. பாளையங்கோட்டைப் பகுதியினர் யாரேனும் இதன் காரணத்தை எனக்குக் கூற முடியுமானால் என் ஆராய்ச்சிக்கு உதவும்.

பி. புஷ்பா, தமிழியல் துறை, மதுரை காமராஜர் பல்கலைக் கழகம்

**வட்டமேஜை**

# சிறுபான்மை வோட்டில் பெரும்பான்மை பலம்!

# அம்மா



## சிவசங்கரி

### 1

வித்யாவுக்கு எழுந்திருக்கவே மனமில்லை. ஆளை விழுங்கிய மெத் மெத் சோபாவில் அமுங்கிப் போய், மொர மொரத்த பொடேடோ சிப்ஸைச் சுவைத்துக்கொண்டே டி.வி.ஐ பார்ப்பதை விட்டுவிட்டு எழுந்திருக்கப் பிடிக்கவே இல்லைதான்.

ஆனால் என்ன செய்வது?

பிடிக்கவில்லை என்றால் ஆயிற்று?

தலைக்கு மேல் வேலை கிடப்பதை யார் செய்வார்கள்? துணிகளைத்தோய்க்க வேண்டும் பாத்திரங்களை அலம்ப வேண்டும், ராத்திரி, சமையலுக்கு என்ன என்று பார்க்க வேண்டும், காய்கறி, பால் ஏதாவது தேவைப்பட்டால் ஸூப்பர் மார்க்கெட்டுக்குப் போய் வாங்கி வர வேண்டும், இன்னும்....

ஓ. காட் — வாட் எ நியூஸென்ஸ் —

வேலைக்காரி மாதிரி அத்தனையும் நாமே செய்ய வேண்டும் — என்ன அமெரிக்கா வேண்டிக் கிடக்கிறது — சே —

ஊரில் என்றால் விரலை அசைத்துக் காரியம் பண்ணும் நிர்ப்பந்தம் இல்லை.

சமையற்கட்டு வேலைக்கு வேதா மாமி வெளி வேலைக்குத் தாயி, தோட்டத்துக்கு வைரம், போதாக் குறைக்கு டிரைவர் கண்ணப்பன் வேறு —

நிஜமாகவே கையைப் பிடிக்க ஓர் ஆள் காலைப் பிடிக்க ஓர் ஆள்தான்.

பத்து மாசங்களுக்கு முன் ராஜுகோபாலைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு அமெரிக்கா வந்து, இங்கு ஹாயி வில்லில் தனிக்குடித்தனம் அமைத்த போது வித்யாவுக்கு இந்தச் சலிப்பெல்லாம் இல்லவே இல்லை.

ஹாயிவில் ஓர் அழகான, சின்ன டவுன். பெரிய நகரத்தின் நசநசவென்ற சந்தடி, குப்பை, நெருக்கம் எல்லாம் கிடையாது. சுத்தமான ஊர். பச்சை புல்வெளிகள், கொலுவில் பார்க்கிற தினுசில் வீடுகள் என்று இருந்த ஹாயிவில் மேல் வித்யா கண்டதும் காதல் கொண்டது என்னவோ வாஸ்தவம்தான்.

ராஜு ஒரு என்ஜினியர். ஆறு வருஷங்களாய் அந்த மண்ணில் வாழ்ந்து ஓரளவுக்கு வேர்கூட விட்டுக் கொண்டு விட்டவன்.

ஹாயிவில் தொழிற்சாலை ஒன்றில் வேலை. வருஷத்துக்கு இருபதினாயிரம் டாலர்கள் சம்பளம். ஹாயிவில் டவுனில் ஓர் அபார்ட்மெண்டில் இருந்தவன் கல்யாணமாகி வித்யா வந்த பிறகு ஸப்பர்பனில் தனி வீடு வாங்கி ஒரு குடித்த தனம் போட்டான். தனக்கு பிளிமத், வித்யாவுக்கு டேட்ஸன் என்று இரண்டாவது கார் வாங்கினான். 'வித்யா வித்யா' என்று பூனைக்குட்டி மாதிரி சுற்றிச் சுற்றி வந்தான். அவளிடம் ரொம்பவும் ஆசையாக இருந்தான்.

வந்து இறங்கினதும் குபேரப் பட்டிணம் மாதிரி மினுமினுமித்த ஊரையும், ஸ்விட்சைப் போட்டால் மரியாதையாய்க் கைகட்டி வாய் பொத்தி வேலை பண்ணும் மிஷின்களையும் கண்ட வித்யாவுக்கு ஏக குஷி.

''அம்பாரமா துணி போட்டேன். கால் மணி தோய்க்க, கால் மணி காய வைக்க, தட்ஸ்ஆல். எடுத்துமடிக்க வைச்சப்போ துணி ஒவ்வொண்ணும் கண்ணிலே ஒத்திக்கலாம் போல இருந்தது. ஸோ க்ளீன். நம்ப ஊர் வேலைக்காரியோட மன்றாடறதை விட இது எத்தனை சுலபம்! கலர் துணிகளோட வெள்ளையை நனைக்காதேமன்னு நூறு தடவை



பெண் : காப்பிக் கலரில் புடவை எடுத்துப் போடப்பா.

கடைக்காரர்: லைட் காப்பியா? ஸ்ட்ராங் காப்பியா?

அ. சுப்புலெக்ஷ்மி

என் மனைவி இல்லாவிட்டால் நான் என்றோ இறந்திருப்பேன்

-சர்ச்சில்



முட்டிப்பேன். பச்சை உன் பாவாடையும், ப்ராவையும் சேர்த்துத் தோய்க்கட்டு 'நா இன்னு பண்ணுவேன், அது ஒட்டிக்கிடிச்சி'ன்னு பதில் பேசுவா...' என்றாள்.

"டிஷ் வாஷர்லே பாத்திரங்களை அடுக்கி ஸ்விட்சைப் போட்டா, அரை மணியிலே இரண்டு கூடைப் பாத்திரங்கள் ரெடி! வெந்நீர்லே அலம்பி, சுடு காத்து வீசி காய வைக்கிறதாலே பாத்திரம் பாலிஷ் போட்ட புதுசு மாதிரி டாலடிக்கிறது! இஸ் ஸோ க்ரேட்!.... நான் பொம்மனாட்டி உட்கார்ந்துண்டு தேய்ச்சாலும் இந்த நேர்விசு வருமா?" என்றாள்.

'ஊரிலே இவம் இரண்டு வேளையும் பெருக்கித் துடைக்கிறதுன்னு பேரு! தூசியும் துப்பட்டையுமாய் வீடு சகிக்காது! இத்தனைக்கும் தாயியோட யாராவது ஒருத்தர் கூட நின்னு மன்றாடறதுக்குக் குறைச்சல் இல்லே; கார்த்தாலே தட்டிச் சத்தம் பண்ண சாமான் மேலே சாயங்காலம் பேர் எழுதலாம், அத்தனை டஸ்ட்...., இங்கே பாருங்கோ, தெரளை க்ளீன்? வாரம் ஒரு நாள் வாக்குவம் பண்ணறேன். ஆளானும் இரண்டு வேளையும் வேலை மெனக்கெட்டு யாரோ உட்கார்ந்துண்டு தட்டற மாதிரி வீடு ஜொலிக்கிறது...' என்றாள்.

"இரண்டு கார் இருக்கிறது. கஷ்டமாலே இல்லையே! அங்கே குட்டியூண்டு ஃபியட் கார் ஒண்ணை மெயின்டெயின் பண்ணறத்துக்குள்ளே போதும் போதும்னு ஆயிடறதே! டிரைவர் ஒருத்தன் இருநூற்றி அம்பது ரூபா சம்பளத்திலே! 'நன்னு அலம்பித் துடைப்பா'ன்னு நாம கரடியாக் கத்தினாலும் அவன் செய்யறதைத்தான் செய்வான். காருக்குள்ளே ஏறி உட்கார்ந்தா கால்லே மண் நறநறன்னு நிரடும். கண்ணாடி, ஸீட்டெல்லாம் தூசியாக இருக்கும்... நாப்பதாயிரம், அம்பதாயிரம்னு போட்டு வாங்கற நம்ப அக்கறை அவனுக்கு ஏது?' என்பாள்.

ஒரு நாளைக்கு ஒன்றாய் முதல் ஒரு மாசமும் வித்யா வாய் ஓயாமல் அந்த நாட்டை அதிசயித்து, சொந்த நாட்டைக் குறை சொன்னதற்கெல்லாம் ராஜு" பதில் ஏதும் சொன்னதில்லை. சின்னச் சிரிப்பு உதடுகளில் விளையாட உன் 'மோகம் முப்பது நாள்' ஸ்வபாவம் எனக்குப் புரிகிறது என்கிற தினுசில் பார்ப்பான். அவ்வளவுதான்.

மோகம் முப்பது நாள் என்று இத்தனை கச்சிதமாக யார் சொன்னார்களோ, அவர்களைத் தலையில் வைத்துத்தான் கூத்தாட வேண்டும்.





ஒரு கற்புள்ள பெண்ணைப்பற்றி மோசமாகப் பேசுவதைவிட ஒரு கோயிலை இடிப்பது குறைந்த பாவம். —ரஷ்ய மொழி

பாலுணர்வுக்கு மட்டும் மோகம் முப்பது நாள் இல்லை. எல்லாவற்றுக்கும் ஆஹா ஊஹூ என்று பறவாய்ப் பறந்து அனுபவிக்கும் எந்த ஒரு விஷயத்துக்கும் — இது பொருந்தும்தான்.

முதல் மாசம் ஆ! அமெரிக்கா அமெரிக்காதான் என்று தலைகால் புரியாமல் குதித்த வித்யா இரண்டாம் மாசம் கொஞ்சம் அடங்கினாள். மூன்று நான்கு என்று செல்லச் செல்ல ஆ! அமெரிக்கா அடங்கிப்போய் அவ்வப்போது சே! அமெரிக்கா என்ற முணுமுணுப்பு எழத் தொடங்கி மாசம் எண்ணி ஆறு போவதற்குள் ராஜுவிடம் வாய் விட்டு ''என்ன ஊர் வேண்டிக் கிடக்கு ராஜு? என்ன ஆனாலும் நம்ப ஊர் மாதிரி ஆகாதுதான்னு தோண்றது.'' என்று சொல்லும் அளவுக்கு வித்யா மாறித்தான் போனாள். பின்னே!

ஸ்விட்சைப் போட்டால் மிஷின் தாசானுதாசனாய் வேலை செய்வது உண்மை என்றாலும் அதற்கு முன்னும் பின்னும் செய்ய வேண்டிய காரியங்கள் எத்தனை எத்தனை?

ஒரு மூட்டை அழுக்குத் துணியை வாஷரில் சோப்புடன் போட்டு, கால் மணிக்குப் பிறகு எடுத்து, திரும்ப டிரையரில் போட்டு, அது காய்ந்த பிறகு எடுத்து மடிக்க வேண்டும். தேவையானதை இஸ்திரி பண்ண வேண்டும்.

பாத்திரங்களை டிஷ் வாஷரில் போட்டு எடுப்பதில் ஏக நச்சு வேலை. ஒவ்வொன்றாய் அடுக்கி ஒவ்வொன்றாய் எடுத்துக் கவிழ்ப்பது கூடப் பெரிசில்லை; ஆனால் பாதிப் பாத்திரங்களை நாமே அழுத்தித் தேய்க்க வேண்டுமே, அதுதான் மகா கஷ்டம். பீங்கான் பாத்திரங்களைத்தான் அது நன்றாய் அலம்பும். நம் சமையலில் உபயோகப்படுத்தும் கறி வதக்கும் இரும்புச் சட்டி, குழம்பு வைக்கும் அலுமினியக் கிண்ணம் இதையெல்லாம் அதற்குத் தேய்க்கத் தெரியாது. தேய்த்தாலும் எண்ணெய் அப்படியே இருக்கும். பிசுக் பிசுக்கென்று கையில் ஒட்டும்.

கார்தான் ஆகட்டும். ஜீ பூம்பா மாதிரி பெட்ரோல் பங்கில் காசை விட்டெறிந்தால் மெஷின்கள் அலம்பி விடுவது நிஜம்தான். ஆனால் யாராவது காரை பங்க் வரை ஓட்டிப் போக வேண்டும். அலம்பி முடித்த பிறகு அங்குள்ள வாக்வம் கிளீனரை எடுத்து உள்பக்கம் சுத்தம் செய்ய வேண்டும். எத்தனை இல்லை?

இதைப் போலத்தான் வீட்டைச் சுத்தம் பண்ணுவதும். சாமான்களைத் துணி கொண்டு தட்டி, கார்பெட், கர்ட்டன்களை வாக்வம் செய்து உள்ளே அழகுக்கு என்று வைத்த க்ரோட்டன்ஸ்களைத் தண்ணீர் விட்டு, வெய்யிலில் வைத்து, 'எங்க ஊர் குத்துவிளக்கு, அது, இது' என்று பெருமையுடன் அள்ளிக் கொண்டு வந்திருந்த ஊர் கலைப் பொருட்களுக்கு ப்ராஸோ போட்டுத் தேய்த்து.... ஓ.... காட்... திஸ் ஈஸ் ஆல் டூ மச்...

வேலைகளைச் செய்து செய்து போர் அடிக்கத் துவங்குவதற்கும், அம்மா, அப்பாவைப் பார்க்க வேண்டும், தம்பிகளோடு சண்டை போட வேண்டும், கொழுக்கட்டை சாப்பிட வேண்டும், பின்னங்கழுத்தில் எண்ணெய் வழிய வழிய அம்மாவிடம் எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும் என்ற ஏக்கங்கள் எழுவதற்கும் சரியாக இருக்கவே சென்னைக்கு டிரங்கால் போட்டுப்பெற்றவர்களுடன் அவளைப் பேச வைத்தான் ராஜு.

''ஹலோ... ஹலோ....'' என்றவளுக்குக் குரலே எழும்பவில்லை.

''வித்யாம்மா, சௌக்கியமா உன்னே நினைச்சண்டே இருக்கோம்'' என்றார் அப்பா.

''அடிக்கடி லெட்டர் போடு... உடம்பைப் பார்த்துக்கோ. மாப்பிள்ளையை நன்னாக் கவனிச்சுக்கோ.குளிச்சண்டுதானே இருக்கே?'' என்றாள் அம்மா.

''எப்ப வரே, வித்தி? நீ இல்லாம எங்களுக்குச் சண்டை போட ஆளே இல்லே'— என்றார்கள் தம்பிகள்.

''நாங்க சௌக்கியம். நா குளிச்சண்டு தான் இருக்கேன். இன்னும் ஒண்ணரை வருஷத்துலே வருவோம்'' என்று ஆளுக்கு ஒரு டயலாக் சொல்லி ஒன்பது நிமிஷங்கள் பேசிப் போனை வைத்தாள்.

அதற்கப்புறம் இரண்டு தடவைகள் ஊரோடு பேசியும் மனசில் சுத்தமாய்த்திருப்தி இல்லை. என்ன பண்ணுவது? கிட்டத்திலா இருக்கிறது, ஓடிப்போவோம் என்பதற்கு?

**வி**த்யா மணிக்கட்டைத் திருப்பி மணியைப் பார்த்தாள்.





## இந்த இதழ் சிறக்க.....

சிறந்த சிறுகதை எழுத்தாளர், நாவலாசிரியர், கலை விமரிசகர் என்று பாராட்டப்படும் குயிலி ராஜேஸ்வரி, பெண்கள் அறிந்து கொள்ள விரும்பும் பல தகவல்கள் அடங்கிய கட்டுரை நூல்களும், நாவல்களும், சிறுகதைத் தொகுப்புகளும் எழுதி வெளியிட்டுள்ளார். மொழிபெயர்ப்புக் கலையில் சிறந்து விளங்குவதுடன் குழந்தைகளுக்காகவும் எழுதியுள்ளார்.

இவரது படைப்புக்கள் தெலுங்கிலும் ஹிந்தியிலும் மொழிபெயர்க்கப்பட்டுப் பிரபல பத்திரிகைகளில் பிரசுரமாகியுள்ளன.

சிங்கப்பூர் பல்கலைக் கழகத்தில் பி. ஏ. பட்டப் படிப்புக்காக இவரது 'அன்பு சுடும்' நாவல் பாடப் புத்தகமாக வைக்கப்பட்டிருக்கிறது.

''சருகின் மன்னி'' என்ற இவரது முதல் கதைதான், எழுத்துத் துறைக்கு இவர் வரக் காரணமாக இருந்தது. அக்கதை கல்கியில் பிரசுரமானதே.

''என்னை எழுத்துத் துறையில் ஊக்குவித்த அமரர் கல்கியை மானசீக குருவாகக் கருதுகிறேன்'' என்று பெருமையோடு கூறும் குயிலி ராஜேஸ்வரி இந்த மகளிர் சிறப்பிதழை மிகுந்த சிரமப்பட்டுத் தயாரித்துள்ளார்.

இந்தச் சிறப்பிதழில் இடம்பெறும் பல புகைப்படங்களையும் குயிலி ராஜேஸ்வரியுடன் ஒத்துழைத்து எடுத்து அளித்திருப்பவர் உத்ரா.

இருவருக்கும் கல்கி வாசகர்கள் சார்பில் நன்றி.

—ஆசிரியர்

பன்னிரண்டு என்றது அது.

நாழியாகி விட்டது. இனியும் அசமந்தமாய் உட்கார நேரம் இல்லை.

எழுந்தாள். டி.வி.யை நிறுத்தினாள்.

துணிகளை வாஷரில் போட்டாள். டிஷ் வாஷரில் பாத்திரங்களை அடுக்கினாள். இரண்டு மிஷின்களையும் ஓட விட்ட பின் சாப்பிட உட்கார்ந்தாள்.

சாப்பிட என்றால் சாதம், சாம்பார், ரசம் என்று இல்லை.

இரண்டு ஸ்லைஸ் ரொட்டி, பீனட் பட்டர், சீஸ் வில்லைகள், நறுக்கின டோமாட்டோ, ஒரு க்ளாஸ் ஆரஞ்சு ஜூஸ்.

அந்த ஊர் வழக்கம் இதுதான்.

கணவன்கள் வேலைக்குப் போய்விட்டால் தங்களுக்கு என்று தனியாய்ச் சமைத்துக் கொள்ள அமெரிக்கப் பெண்களுக்குச் சோம்பேறித்தனமென்பதால் ஒரு வழியாய் ராத்திரிதான் விதவிதமான சூடு சமையல்.

ஊரிலிருந்து வந்த புதிதில் ராஜு ப்ரேக்பாஸ்ட் சாப்பிட்டுவிட்டுத் தொழிற்சாலைக்குப் போனதும், ராத்திரி சாப்பிட வேண்டிய சமையலைப் பகலிலேயே சமைத்து, ஒரு மணிக்கு வக்கணையாய் வித்யா சாப்பிடவே செய்தாள். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல ஒரே தினுசு சாப்பாட்டை இரண்டு வேளை சாப்பிடுவது பிடிக்காமல் போக அவளும் அந்த ஊர் வழக்கப்படி பகலில் சமைக்காமல் தகிடு தத்தம் பண்ணும் வழியைப் பின்பற்றத் தொடங்கினாள்.

சாப்பிட்டு முடிந்து தட்டை அலம்பி ஸிங்கில் கவிழ்த்தாள். காய்ந்து போன துணிகளை மடித்தாள். இஸ்திரி பண்ண வேண்டிய புடவை, ரவிக்கை ஷர்ட்டுகளை இஸ்திரி செய்தாள்.

மணி மூன்றை நெருங்குகையில் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடக்கப் பிடிக்காமல் பக்கவாட்டுக் கதவைத் திறந்து கொண்டு தோட்டத்தில் இறங்கினாள்.

தோட்டத்தில் ஒரு பக்கமாய் நின்ற மேபிள் மரம் நாலு நாட்களாய் மஞ்சள் குளித்து இருந்தது. இன்றைக்கு மருதாணி இட்டுக் கொள்ளத் தொடங்கி யிருந்தது.

இலையுதிர் காலம். மரங்களெல்லாம் பச்சையிலிருந்து மஞ்சளாகி, தீப்பிடித்து விட்ட தினுசில் ஜ்வாலை கக்கும் சிவப்பாகி, அப்புறம் உதிருமாம். ராஜு சொல்லி யிருந்தான்.

மனசு இருந்த இருப்பில் மேபிள் மரத்தின் அழகை ரசிக்க வித்யாவுக்குப் பிடிக்கவில்லை. இலை அத்தனையும் கொட்டக் கொட்டப் பெருக்கி வாருவதற்குத்தான் போது சரியாய் இருக்கும் என்று அலுத்துக் கொண்டவளின் கண்களில் படர்ந்திருந்த புல்வெளி பட்டது.

'புல் வெட்டணும், ரொம்ப வளர்ந்து விட்டது. இல்லாவிட்டால் கவுண்டியிலிருந்து புகார்வந்துவிடும்.'உங்கள் தோட்டப் பராமரிப்பு சரியில்லை' என்று.'

புல்லை வெட்டி, பிளாஸ்டிக் பையில் மூட்டை கட்டி ராஜ உபசாரம் செய்து குப்பை வண்டியில் ஏற்ற வேண்டும்!

யோசனையில் ஆழ்ந்திருந்த வித்யா 'ஹாய் தேர்' என்ற குரல் கேட்டுத் திரும்பினாள்.

டோரா—

அடுத்த வீட்டுக்காரி.

''ஹலோ—''

தோட்டத்தில் ஏதோ வேலை செய்து கொண்டிருந்த டோராவிடம் பேச வித்யா இரண்டடி முன்னால் வந்த அதே நிமிஷத்தில் ராபின் — டோராவின் இரண்டாவது மகன்— அரக்கப் பரக்க ஓடிவந்து ''மம்மி, ஜென்னி மேல், கார் மோதி விட்டது. தெரு முனையில் மயக்கமாய்க் கிடக்கிறாள் உடனே வா'' என்று மூச்சிரைக்கக் கத்தினான்.

(தொடரும்)

கன்னிப் பெண்ணின் அழகு உலகில் உள்ள எல்லாச் சிபாரிசுக் கடிதங்களையும் விட வலுவானது.

—அரிஸ்டாட்டில்

# திரும்புவதும் பெண்ணின் உரிமைதான்!

உஷா சுப்ரமணியன்

**மீ**னு தன்னைத் தானே கேட்டுக்கொண்டாள்: ''எனக்கு எந்த விதமான குற்ற உணர்வாவது இருக்கிறதா?''

மனத்தின் எல்லா மூலை முடுக்குகளிலிருந்தும் ஒரே ஒரு குரல்தான் மனச்சாட்சியின் எதிரொலியாக எழுந்தது. ''இல்லை...இல்லவே இல்லை.'' முடிவு என்ன இன்று புதிதாக வந்து முளைத்ததா? ஆறு மாதங்களாகக் கொஞ்சம் கொஞ்சமாக யோசித்து, சிந்தித்து இன்று செயல்பட்டிருக்கிறாள். அவள் மனத்தில் எந்தக் குழப்பமும் இருக்க முடியாது.

சிவப்பு விளக்கு மாறியதும் பெட்டிக்குள் ஏறி உட்கார்ந்து கொண்டாள். ப்ரெட்ரிக் பார்ஸைத்தின் ''டெவில்ஸ் ஆல்டர் நேடிவ்''வில் நேற்றிரவு படித்து வைத்திருந்த எண்பத்து எட்டாவது பக்கத்திலிருந்து தொடர்ந்தாள்.

வண்டியின் குலுக்கலில் ஏற்பட்ட பார்வைக் கலங்கலில் புத்தகத்தில் மனம் பதியவில்லை. ஜன்னலில் முழங்கையைப் பதித்து அதில் தலையை ஏந்திக் கண்களை மெல்ல மூடினாள்.

இந்த ஓராண்டு கால நினைவுகள்...அவளைப் பொங்கிப் பொங்கி வருத்தும் நிஜங்கள்... நிழற்படங்களாக....



இந்த ஓராண்டுக்கு முன் அப்பா, அம்மா, அண்ணா, அண்ணி, தம்பி எல்லோரும் குழுமியிருக்கிறார்கள்.

''மாமா, மீனுவின் அறிவுக்கும் புத்திசாலித்தனத்துக்கும் அதை நல்லாப் போற்றி வளர்க்கிற பிள்ளையாகத்தான் பார்த்திருக்கிறீங்க'' இது அண்ணி.

''சொந்த பிஸினஸ் பண்றதாலே நிரந்தரமா வரும்படி இருக்கான்னு நாலு பேரை விசாரிக்க வைக்கிறது நல்லது'' – இது அண்ணா.

''அதெல்லாம் விசாரிக்காமலா வந்திருப்பேனா தம்பி? மெட்ராஸிலே பத்துக் கிரவுண்டிலே மாடியும் கீழுமா பெரிய பங்களா இருக்கிறது. வீட்டிலே மூணு கார். டிரைவர், தவிச்சக்காரர், எடுபிடி ஆளுங்க வேறு!''



தாயின் இதயம் குழந்தையின் பள்ளிக் கூடம் —அமெரிக்கப் பழமொழி

ரவீந்திரன் நல்ல சூட்டில், அதிக கம்பீரமாக அண்ணன், அண்ணிகள் தொடர, பெற்றோர் முன் செல்ல மிடுக்கு நடையில் வந்தபோது குடும்பமே மகிழ்ச்சிப் பிரவாகத்தில் கரைந்தது. ''இவர் பெரிய பிள்ளை சுரேந்திரன். இன்ஜினியரிங் படிச்சுட்டு ஸ்விட்ச் கியர் பாக்டரி வச்சிருக்காரு... வாம்மா கமலா.. இவ மூத்த மருமவ... பி. ஏ. படிச்சிருக்குது. ரவீந்திரன் கடைசி. அவனைப் பத்தித்தான் விவரம் தெரியும். எம். டெக். அமெரிக்காவில் படிச்சான். அண்ணன் தொழிற்சாலையையும் கவனிச்சுக்கிறான்... சொந்தமாக ஹோசூரில் புதுத் தொழிற்சாலையும் தொடங்கியிருக்கிறான்.''

அனைவரும் மலைத்தனர். இத்தனை படித்த, பண்பான குடும்பமா? மீனு இங்கே மதிக்கப்படுவாள். பேணப்படுவாள். அவளைப் பற்றி இனி எந்தக் கவலையும் இருக்காது!

மீனு கனவில் ஆழ்ந்தாள். ''ஆஜானுபாகுவான ஆண்மை நிறைந்த கணவன்: அப்பா, அம்மாவைப் போலவே அன்பு சொரிய இரு முதியோர், அண்ணா, அண்ணியைப் போல் சகோதரப் பாசத்தைப் பொழிய இரண்டு அண்ணா அண்ணிகள். கல்லூரியில் கோப்பையாகப் பெற்ற டென்னிஸ் ஆட்டத்தைத் தொடரணும், சென்னையில் நிறைய வசதி இருக்கும். வீட்டில் யாரும் மறுப்புச் சொல்ல மாட்டார்கள்.

திருமணம் முடிந்த மறுநாள் மாப்பிள்ளை வீட்டில் மறுசாப்பாடு. பிரும்மாண்டமான ஹாலில் வரிசை வரிசையாக நுனி வாழை இலைகள். சுரேந்திரனின் மனைவி கமலா, தயங்கித் தயங்கி மூலையில் நின்ற மீனுவை ....''அட மீனு, வெட்கப்பட்டுக்கிட்டு மூலையில் நின்னுக்கிட்டிருந்தா எப்படி? வா, வா, புருஷன் பக்கத்திலே உட்கார்ந்துக்க...'' மூலையில் அமர்ந்திருந்த ரவீந்திரனின் அருகில் கையைப் பிடித்து அவளை உட்கார வைத்தாள். ரவீந்திரனின் தாயார், அண்ணிகள் சமையற்காரர்களோடு சேர்ந்து பரிமாற விருந்து தொடங்கியது. சாதத்தில் பருப்பைப் போட்டு, நெய் ஊற்றிப் பிசையும் தருணம் ரவீந்திரனின் தாயார் குரல் வெடுக்கென எழுந்தது.

''மீனு, புது மருமவப் பொண்ணே, இங்கே எழுந்து வறியா?'' — வாயருகே கொண்டு சென்ற சோற்றுடன் ஒரு நிமிடம் தயங்கிய மீனு, சட்டென இருக்கையை விட்டு எழுந்தாள். மாமியாரைத் தொடர்ந்து அடுத்த அறைக்குள் நுழைந்தாள். மாமி முகம் கோபத்தில் அசிங்கமாகியிருந்தது. ''தோ பாரு மீனு... இனிமே நீ ஒரு வீட்டு மருமவ. வீட்டு ஆம்பிள்ளைங்களுக்குச் சமமாப் பொம்பிள்ளைங்க சாப்பிடறதெல்லாம் இந்த வீட்டில் நடக்காது. யாபகம் வச்சுக்க....'' ஊசி முனைகளாகச் 'சுருக் சுருக்' என்று தைத்த வார்த்தைகளின் எதிரில் பலவீனமான குரலில் அவள் ''இல்லையம்மா'' என்று பரிதாபமாகப் பேச ஆரம்பித்ததும் உட்கார வைத்த அண்ணியாவது தன் பக்கம் பேச, தன்னைக் காப்பாற்ற வர மாட்டாளா என்று தேடியபோது அண்ணி நமுட்டுச் சிரிப்புடன் முதுகைக் காட்டிக் கொண்டு நின்றாள்.

அடுத்த பந்தியில் உட்கார்ந்தபோது அடக்கிய அழுகை உள்ளுக்குள்ளாகப் பொங்கிப் படர்ந்து வயிற்றை நிரப்பி நெஞ்சையே அழுத்தியது. ''நான் தவறாகவே நடந்து கொண்டிருந்தாலும் நான் சாப்பிட்ட பிறகு தனியே அழைத்து இந்த வீட்டு முறைகளைக் கூறியிருக்கலாமே; உரிமை உள்ளவர்கள் தானே? இப்படி வாயில் சோற்றைப் போடும்போதா, இத்தனை கடுமையாகவா இடித்துரைப்பது?''

இரவில் ரவீந்திரன் அணைத்தபோது அவள் மெல்லச் சிணுங்கலுடன் கணவனிடம் காலையில் நடந்ததைச் சொன்னாள். ''அதெல்லாம் கவலைப்படாதே மீனு, அம்மா நல்லவங்க. அதிகம் படிக்காதவங்க இல்லையா அதுதான் பேசத் தெரியாமப் பேசியிருப்பாங்க... மனசிலே வெச்சுக்காதே'' என்று கணவன் ஆற்றினான். ''அம்மா நல்ல குணம் எனக்குத் தெரியுங்க... ஏதோ சட்டென ஏற்பட்ட வருத்தம். உங்களிட்ட இறக்கினதும் மறைஞ்சு போச்சுங்க'' என்று அவள் நடந்ததை மறந்து சிரிக்க வேண்டும் என்று எண்ணியபோது ரவீந்திரன் அவளை முரட்டுத்தனத்துடன் பிடித்துத் தள்ளினான். ''எங்க வீட்டுப் பெண் பிள்ளைங்க அடக்கமாகத்தான் இருப்பாங்க... அம்மாவும், அண்ணிமாருங்களும் எத்தனை ஒத்துமையா இருக்காங்க பாரு. நீ வந்த அன்னிக்கே குடும்பத்தை ரெண்டு பண்ணிவே, நான் ரொம்பப் பொல்லாதவனா ஆயிடுவேன்... பாரு....'' என்று சட்டென்று விலகி மறுபுறம் படுத்தான். மீனு திக்பிரமை பிடித்து நின்றாள்.

நாள் முழுவதும் என்ன செய்வது என்பது பிரச்னை. அண்ணிகள் எவரும் அறைக் கதவைத் திறக்கவோ, வெளி வரவோ காணோம். படிக்க ஏதாவது புத்தகம் கிடைக்குமா என்று ரவீந்திரனின் அலமாரியைக் குடைந்து பார்த்தாள். பொறியியல் புத்தகங்களாகக் குவிந்து கிடந்தன. அவள் எதைப் படிக்க?

தயக்கத்துடன் சென்று சின்ன அண்ணி சுகன்யாவின் கதவைத் தட்டினாள். ஐந்து நிமிடம் கழித்து அலுப்புடன் அவள் கத

காலி கண்ணாடி டம்ளரில் சூடான பாலையோ அல்லது காப்பியையோ ஊற்றினால், டம்ளர் விரிசல் அடையும், இதைத் தவிர்க்க, காலி கண்ணாடி டம்ளரில் ஒரு ஸ்பூனைப் போட்டுவிட்டு, பிறகு சூடான பானங்களை விடலாம். ஸ்பூன் உஷ்ணத்தை உட்கிரகித்து விடுகிறது! டம்ளரும் காப்பாற்றப்படுகிறது!
—சாவித்திரி



வைத் திறந்தாள். "ஓ, நீதானு, நல்ல தூக்கத்திலே கெடுத்திட்டியே...."

"ஒண்ணுமில்லீங்க... படிக்க ஏதாவது புஸ்தகம் இருக்குமான்னு....."

"ப்பூ.... இவ்வளவுதானு இதுக்காவத் தான் வேலைமெனக்கெட்டு கதவைத் தட்டினயா? தவிசுப்பிள்ளேகிட்ட ராணிமுத்து, திரைக்கதிர் ஏதாவதுஇருக்கும், வாங்கிக்க—" கதவைப் 'பட்'டென்று முகத்தில் அடிக்காத குறையாக மூடிக்கொண்டாள்.

இரவு கணவனிடம் சஞ்சிகைகள் வாங்க வேண்டும் என்றுசொன்னபோது அவன் மறுக்க வில்லை. "வீட்டிலே யாருக்குப் படிக்க நேரமிருக்குது? அதனுலேதான் ஒண்ணும் வாங்கறதில்லே... நீ வேணும்னு வாங்கியாரச் சொல்லிப் படி" என்று இருபது ரூபாயை அவளிடம் தந்தான்.

காலையில் ஆண்கள்வேலைக்குச் சென்ற பிறகு மாமியை அணுகினுள். "மாமி... அவரைக் கேட்டேன்.... புஸ்தகம் வாங்கிக்கச் சரின்னரு..., மாமி, நான் கடைக்குப் போயி வந்து விடட்டுமா? தெரு முனையில் தானே கடை?"

"எப்படிப் போவே?"

"நூறு கஜம்தானே, நிமிஷத்திலே நடந்து வந்துடுவேன்...."

"மாமி, பேச்சைக் கேட்டீங்களா?" அண்ணி ஒருத்தி ஏற்றிக் கொடுத்தாள்.

"புது மருமவ குடும்பத்தையே குலேச் சுடுவா போலிருக்கே... இந்த வீட்டுப் பொம்பளேங்க தனியே படி இறங்கி அல்லூ, அயலூ பார்த்ததில்லே...."

"அப்ப பரவாயில்லேங்க... இவர் அண்ணு கூடத்தானே காரில் போயிருக்கார்? இவர் காரிலேயே போய்விட்டு வந்திடுவேன்..."

"தானே ஓட்டிக்கிட்டா....?" அண்ணி ஒருத்தி குறுக்கிட்டாள்.

"அடப் பாவி மவளே, இந்தக் குடும்பமே போகப் போவுது. அடக்கமில்லாத ராட்சசியைக் கட்டிக்கிட்டு நாசமாப் போகப் போறேம். பொஸ்தகம்... அது, இதுன்னு தலைமேலே ஏர்ருளேன்னு பார்த்தா இப்பக் கார் ஓட்டுவாளாம்.... ரவித் தம்பி சாது... அவனுக்கு இப்படி ஒரு பெஞ்சாதியா?" அழுகையும் ஆத்திரமுமாகத் தன் விதியை நொந்து கொண்டாள்.

அன்று ஞாயிற்றுக் கிழமை. சாப்பாடு தயாரா என அறிவதற்காகச் சமையலறையில் தலை நீட்டிப் பார்த்தாள்.

அங்கு அவள் கண்ட காட்சி — வேலைக்காரி சமையல் அறைக்குள் இருக்கும் ஸ்டோர் ரூமுக்குள் சென்று, தவிசுக்காரர் கண் எதிரிலேயே ஏதோ பொட்டலங்களைப் புடவையில் ஒளித்து வந்தாள். ரகசியமாகக் காம்பவுண்டுச் சுவரின் மறுபுறம் நின்றிருந்த ஓர் ஆளிடம் கொடுத்துவிட்டு மறுபடியும் மறுபடியும் புதுப் பொட்டலங்களுடன் வெளி வந்தாள். மீனு பதை பதைப்புடன் சமையற்காரரை அணுகினுள். "தவிசு மாமா! முனியம்மா இப்படிச் சாமான்களை மறைச்சு எடுத்துக்கிட்டுப் போறு, சும்மா பார்த்துக் கிட்டு இருக்கீங்களே?"



ஆரஞ்சுப் பழங்களின் தோல்களைச் சேகரியுங்கள்! அவைகளை வெய்யிலில் உலர்த்தி வையுங்கள்! காய்ந்ததும், பட்டுத்துணிகள், டெரின், டெரிலின் இவைகள் வைக்கும் பீரோவில், பெட்டியில் அரிசி டின்களில் போட்டு வையுங்கள்! பூச்சி பொட்டு, கரப்பான் வராது!

—திருமதி நாராயண ராவ்

"அதெல்லாம் நான் கண்டுக்கிறதில்லேங்க. தெரிஞ்ச விஷயம் தானுங்களே... சரு... நீங்க வீட்டுக்குப் புதிசு...."

என்ன அலட்சியம்... பொறுப்பில்லாத் தனம்... ஹாலில் சென்று மாமியிடம். "மாமி முனியம்மா ஸ்டோர் சாமான்களே மூட்டை கட்டி ஸ்டோர் ஆளிடமே கொடுத்து விக்கிரு... தவிசுப் பிள்ளேவேறே சொல்கிருர். இதெல்லாம் கண்டுக்கக் கூடாதாம்." என்ருள்.

"முனியம்மா அப்படி யெல்லாம் செய்யறவ இல்லேயே, இரு வரேன்..."

மீனுவைத் தொடர்ந்து சமையலறைக்குள் வந்தவள் முகமே குரூரமாக மாறியது. கண்களைப் பயங்கரமாக உருட்டி விழித்தாள். "தவிசு சொன்னுரில்லேயா, கவனிக்கக்கூடாதென்னு. அப்புறம் உனக்கென்ன வம்பு? மாமியைக் காட்டிக் கொடுக்கப் பாக்கிறயா, நான் விக்கச் சொன்னேன், அவ விக்கிரு... உனக்கென்ன இதில்... இனிமே இந்த மாதிரி கோள் சொல்லிக்கிட்டு வந்தியோ நாக்கையே வெட்டிப்புடுவேன்.... அடிக்காத குறையாகக் கையை ஓங்கினுள். வேலைக்காரி, சமையற்காரி முன்னிலையில் இப்படி ஒரு கேவலமான பேச்சா?

மறுநாள் சுகன்யா மகன் ப்ரகாஷை அழைத்துக்கொண்டு மீனுவின் அறைக்குள் வந்தாள். "என்ன மீனு தூங்குகிறயா?"

"இல்லே அண்ணி."

"மீனு சீட்டுச் சேரறியா?"

"சீட்டா, என்ன சீட்டு?"

பெண்களாகச் சேர்ந்து பணம் போட்டு, பணம் தேவையானவர்கள் வட்டிக்கு எடுக்கும் சீட்டு விவகாரத்தைப்பற்றி விளக்கினுள்.

"அண்ணீ.... நாளைக்கு இவரைக் கேட்டுச் சொல்கிறேன்...."

"சேச்சே... அவர் இவர் வரைக்கும் போகலாமா? நம் பணத்திலே கொடு."

அவளிடம் ஏது பணம்? "அதெல்லாம் ஒண்ணும் இல்லே அண்ணி...."

"சட்... வாடா ப்ரகாஷ்.... நீ போய் டாக்வி கொண்டா. இந்தா — எட்டணு" நாணயத்தை மகன் கையில் அழுத்தினுள். "போடா போ. சீக்கிரம் கொண்டா."

பெண் விரும்பினுலும் சரி, வெறுத்தாலும் சரி எதையும் செய்யத் துணிந்து விடுகிருள்.

—லத்தீன் பழமொழி







ப்ரகாஷ் முணு முணுத்தான். "கூட வேணுமா, சரி... திரும்பி வந்து ரெண்டு நோட்டாத் தரேன். இப்ப கௌம்பு. அம்மா தாயே, நீ போய் எதையாவது உளறி வைக்காதே...." வெறுப்புடன் அறைக் கதவை மூடிவிட்டுக் கிளம்பிச் சென்றான்.

ஜன்னல் வழியே பார்த்த மீனுவுக்கு பிரகாஷ் அழைத்து வந்த டாக்ஸியில், சுகன்யா என்கிற 'இந்த' வீட்டுப் பெண், தனியே படி இறங்கி, அல்லு, அயலு பார்த்திராத மருமகள் தனியே உட்கார்ந்து செல்வதும், மாமியார் வாழ்த்துக் கூறி வழியனுப்புவதும் தெரிந்தது.

ஒரே வீட்டுக்குள் பெண்களுக்கென ஒரு தனி சாம்ராஜ்யம்... கீழ்த்தரமான இருட்டு சாம்ராஜ்யம். இதில் அவள் சேர்ந்துகொண்டால் ஒழிய அவளை இங்கு எவரும் தங்களில் ஒருத்தியாக ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இதைவிடத் தனிமையே பெரிது. ஆனால் எத்தனை நாள் தாங்கும்?

மெல்ல மெல்ல ரவீந்திரனிடம் முறை விட்டுப் பார்த்தாள். "எப்படியாவது வெளியே போய் வாழுவோமுங்க. இங்கே எதுவும் சரியில்லே. எம். டெக் படிச்ச உங்களுக்கு எட்டு நூறுவது சம்பளம் கிடைக்காதா? சின்னக் குடித்தனத்தில் செட்டாக இருக்கலாங்க..." சாதாரணமாக விஷயங்களைக் கலகலப்புடன் பேசுபவன் சீறி விழுந்தான். "ஒண்ணு தெரிஞ்சுக்க. நான் பெத்தவங்களை விட்டு வர ஆளில்லே. பிஸினெஸில் எல்லோரும் சேர்ந்து பணம் போட்டிருக்கோம். நான் பெரியவங்களை விட்டு வரமாட்டேன். இங்கே இருக்கப் பிடிக்கலேன்னு நீ ஓடிப்போ, போய்த் தொலே..."

மீனுவுக்குப் புரிந்தது. தன்னை நிலைநாட்டிக் கொள்ளும் தைரியம் ரவீந்திரனிடம் இல்லை. சர்வாதிகாரத் தாயாரின் ஆணையில் அடங்கி, அடங்கிச் சின்ன வயது முதலே பயந்து வளர்ந்து, சுய மதிப்பையும் சுய பாதுகாப்பையும், கண்ணியத்தையும் இழந்துவிட்டான்.

"ஒரு நாளாவது மாலை நீங்க போறபோது எனப்புக்குக் கூட்டிக்கிட்டுப் போகக் கூடாதா? ஏதாவது விளையாட, புஸ்தகம் படிக்க, நாலு பேருடன் பழக...."

"ஏம் மீனு நீ மாத்திரம் இப்படித் துள்ளறே? ஒன்னைப் போல படிச்சவங்கதானே கமலா அண்ணியும், சுகன்யா அண்ணியும்... அவங்க வீட்டோடு சந்தோஷமா இல்லையா.. நீ ஏன் 'ரெஸ்ட்லெஸ்ஸாக'த் தவிக்கிறே?"

"வீட்டிலே சமையலறைக்குள் போகக் கூடாது ... யாரும் பேசறதும் கிடையாது... ப்ரகாஷ், ரமாவிடம் கூடப் பழக அனுமதியில்லே. நீங்களும் இரவு பத்து மணிக்கு முன்னாடி வீடு திரும்பறதில்லே. நான் இப்படியே இருந்தால் கட்டாயம் பைத்தியமாகிவிடுவேன். அமெரிக்காவிலேயே தங்கிப் படித்த நீங்க இப்படியா பத்தாம் பசலியா இருப்பீங்க? ப்ளீஸ்...."

"மீனு, ஒனக்கு வாய் ஜாஸ்தி ஆயிடிச்சு. நான் பத்தாம் பசலின்னு வேறு எவளை யாவது இழுத்துக்கிட்டு ஓடு... போ போ..."

"இது பண்புள்ளவங்க பேசற பேச்சில்லீங்க. அது எஸ்கேபிஸம். ஆணை எதிர்த்து நின்று தன்னை நிலைநாட்டிக்க முடியாத பயங்கொள்ளித்தனம். அந்த மாதிரி விஷயத்தை என்னோடு சம்பந்தப்படுத்தாதீங்க...."

நாளுக்கு நாள் பேச்சு, விவாதம், தப்பர்த்தங்கள், குமுறல்கள், மனக் குழப்பங்கள்... அவள் தாங்கிக் கொண்டாள். வீட்டுக்குள்ளேயே கொடுக்கல் வாங்கல், விவகாரங்கள்... எல்லாம் அவள்நெஞ்சை ஊசியாகக் குத்தின. சின்ன விஷயத்திலெல்லாம் கூடப் பழி அவள் மேல் அநியாயமாகச் சுமத்தப்பட்டது. தன்னைக் காத்துக்கொள்ள வழி தெரியாமல், அவள் விழிப்பது... என்ன வழி... பொறியில் சிக்கிய எலி எப்படித் தப்பிக்கும்?

இதற்கு முடிவு தேடியே ஆக வேண்டும். ரவீந்திரனிடம் தன் முடிவைத் தெரிவித்தாகி விட்டது. அவன் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆசையுடன் புகுந்தவள் இன்று வெறுப்புடன், மனக் கசப்புடன் திரும்புகிறாள். பெண்ணின் தேவைகள் வயிறும், உடலும் மட்டும் சம்பந்தப்பட்டதாக இருந்தால் இங்கு அவளுக்கு எந்தக் குறையுமில்லை. மனம் என்று ஒன்று, பண்பட்ட ஒன்று வளைய மறுப்பதால்தானே இத்தனை கஷ்டம்? படிப்பு, தனித்தன்மை, நியாயமான இட்டங்களைப் போற்றும் ஆசை....அவள் கிளம்பி விட்டாள்.

சட்டத்துடன் மூன்று நான்கு ஆண்டுகள் இழுபறி நடக்கும். விடுதலை கிடைப்பது சுலபமில்லை. ரவீந்திரன் விட்டுக்கொடுக்க மாட்டான், அவ்வளவு சுலபத்தில். பெற்றோரே ஏற்பாரோ மாட்டாரோ... ஆனால் அவள் படிப்பு கைகொடுக்கும். ஆசிரியர், வேலை தேடிக் கொள்ளலாம். தன்னை அழித்துக் கொள்ளாமல் ஒரு பெண் வாழ இதுதான் வழி என்றால்.....?

வந்ததைப் போல் திரும்புவதும் அவள் உரிமை. சட்டமும் பாரம்பரியமும் இந்த உரிமையை மதிக்கா விட்டால் கூட படித்த பெண் அறிவாள்.... இது பெண் இனத்துக்கு அவள் ஆற்ற வேண்டிய கடமை!

அதோ பட்டுப்புடவையைத் தழையத் தழையக் கட்டிக்கொண்டிருக்காளே அவள் அமெரிக்காவில் இருக்கும் என் மூத்த பெண். "பாப்" தலையும் மாக்ஸியுமாயிருக்காளே அவள் அம்பத்தூரில் இருக்கும் இளைய மகள்.

—தோ கண்ணன்



சினி ஸ்டில்லும் சிந்தனையும்



Riddle of the Sande என்ற ஆங்கிலத்திரைப் படத்தின் இந்த ஸ்டில் படத்தை நடிகை சுஜாதாவிடம் கொடுத்தவுடன் கிட்டத்தட்ட பத்து நிமிடங்களுக்கு அவரால் பேசவே முடியவில்லை. உணர்ச்சி வசப்பட்டுப்போனார். பிறகு சொன்னார்:

உண்மையாகவே இந்தப் படம் மிக உயர்ந்த ஒன்றுதான். உணர்ச்சிகளின் மொத்த உருவமாக விளங்குகிறது. விடா முயற்சியுடன் கூடிய போராட்டம், வெற்றியின் உயர்வு, தோல்வியின் தழுவல் எல்லாம் இதில் உள்ளது. அழுகையும் சிரிப்பும் அதனூடே தத்துவத்தின் பிறப்பும் இந்தப் படத்தில் நான் நீ என்று போட்டி போட்டுக்கொண்டு முன் வருகின்றன. படத்திலிருப்பவர் ஆணாக இருந்தாலும் நான் அந்தக் கதாபாத்திரத்தைப் பெண்ணாக எண்ணிப் பார்க்கிறேன். இப்படத்தைப் பார்த்ததும் எனக்கு நினைவு வந்து நான் சொல்லப்போகும் இக்கதை உண்மைக் கதை. கதாநாயகி அனாதை. அவளுக்கு ஓர் அண்ணன். வாழ்க்கையில் கஷ்டங்கள் பட்டு முன்னேறுகிறான். ஒரு நல்ல இடமாகப் பார்த்து அண்ணன் அவளுக்குத் திருமணம் செய்து வைக்கிறான். ஒரு குழந்தை பிறக்கிறது. குழந்தை பிறந்த சில மாதங்களில் கணவன் இறந்து விடுகிறான். தானும் கணவனுடன் இறந்துவிட வேண்டும் என்று விரும்பினாலும் குழந்தைக்காக உயிர் வாழவேண்டிய நிலையில் அப்பெண் இருக்கிறாள். அண்ணன் வீட்டுக்குச் செல்கிறாள். அண்ணனின் நண்பன் ஒருவன் இவள் விஷயம் தெரிந்து இவள் மேல் ஆசை கொள்கிறான். அது ஆசைதானே ஒழிய அன்பல்ல. இதன் விளைவால் வெளியேறித் தனித்துச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் அவளுக்கு ஏற்படுகிறது. தனது குழந்தையைக் கண்ணும் கருத்துமாக அவள் வளர்த்து வருகிறாள். சென்ற இடத்தில் ஒரு தோழி. தோழியின் தம்பி தனது காதலைத் தோழியின் வாயிலாகத் தூது அனுப்புகிறான். மனிதர்களின் மனநிலை புரியாமல் தவிக்கிறாள். தான் வாழ்வது தன் குழந்தைக்காகத்தானே ஒழிய இல்வாழ்க்கையின் அர்த்தத்தைப் புதிதாகப் புரிந்து கொள்ள விருப்பப்பட்டு அல்ல என்பதை அவளின் ஒரு மனம் உணர்த்துகிறது. மற்றொரு மனம் ஆண் துணை இல்லாமல் உன்னால் வாழமுடியுமா என்று கேள்வி எழுப்புகிறது. முடிவு செய்ய முடியாத அளவுக்குப் பிரச்னைகளை வளர்த்துக் கொண்டு எந்தப் பாதையைத் தேர்ந்தெடுப்பது என்று தெரியாமல் திண்டாடுகிறாள். ஊரைவிட்டே ஓடி விடலாமென்றால் பையனின் படிப்புப் பாதிக்கப்படும். இப்படிப் பிரச்னைப் பருந்துகளால் கொத்தப்படும் எலியின் நிலையில்தான் அவள் இருக்கிறாள். இம்மாதிரியான இக்கட்டான நிலையை இப்படம் உணர்த்துகிறது. வாழ்வோமா என்ற ஏக்கம்; வாழ்ந்துதான் என்ன பயன் என்ற நிராசை; செத்தாலே தேவலாம் என்ற அலுப்பு எல்லாம் படத்தில் பிரதிபலிக்கின்றன.

> பெண் இல்லாத வீடும், வீடில்லாத பெண்ணும் மதிப்பில்லாதவை.
>
> —பாலஸ்தீன மொழி

"அது சரி முழுக் கதை என்ன?" என்று என்னிடம் கேட்காதீர்கள்! ஏனெனில் முடிவு ஒரு மிகப் பெரிய சஸ்பென்ஸ்! நானே அக்கதையைத் திரைப்படமாக்கினாலும் ஆக்குவேன். காபிரைட் உரிமை எனக்குத்தான். காப்பியடிப்பவர்கள் ' தண்டனைக்குள்ளாவார்கள்!

பேட்டி: **சலன்**

அடுத்த இதழில் நடிகர் சுதாகர் பேசுகிறார்!



# உணர்ச்சிகளின் மொத்த உருவம்!

சுஜாதா




## முன்கதைச் சுருக்கம்

சிந்து துர்க்கக் கோட்டை அருகே கடல்ராணி கடலில் நீராடிவிட்டு வருகையில் இந்திரஜித் அனந்தைச் சந்திக்கிறாள். ஸ்டான்டன், ஸ்மித் என்ற இரு வெள்ளைக் கப்பல் அதிகாரிகளை அனந்த் மடக்கு வதைக் கண்டு கடல் ராணிக்கு அனந்திடம் பெரு மதிப்பு ஏற்படுகிறது. காப்டன் இங்லண்டும் அனந்தின் ஆற்றலால் ஈர்க்கப்படுகிறான். அனந்த் கடல்ராணி யையும், இங்லண்டையும் பாண்டவ கட்டுக்கு அழைத் துச் சென்று பயங்கர மனிதன் வில்வரை அறிமுகப் படுத்துகிறான். இங்லண்டுக்கு வில்வரைக்கண்டு திகைப்பு.

தென்னஞ் சோலையில் அனந்தும் கடல்ராணியும் இனிய சல்லாபத்தில் மூழ்குகின்றனர். கடல்ராணியைச் சுடவந்த ஸாத்விந்தியின் கையாளைக் கொன்று ராணியைக் காப்பாற்றுகிறான் அனந்த். பிரசித்தி பெற்ற கொள்ளைக்காரன் டெய்லருடனும் கடல் ராணி யுடனும் காஸண்ட்ரா கப்பலுக்குச்செல்கிறான் அனந்த். கடல் ராணியின் தந்தை சங்கர்பந்த் மகளைக்காப்பாற்ற வருகிறார்.

இங்லண்ட் காஸண்ட்ராவில் விருந்தினர்களுக்குத் தங்க வசதி செய்து தருகிறான். கடல்வீரன் துலாஜி ஆங்க்ரே காஸண்ட்ராவுக்கு வந்து சேரு கிறான். காஸண்ட்ரா கப்பலில் துலாஜி ஆங்க்ரே யின் துப்பாக்கி சுடும் வல்லமை வெளிப்படுகிறது! காஸண்ட்ரா கப்பல் மதுவிலும், நடனத்திலும் அமர்க் களப்படுகிறது. காஸண்ட்ரா கப்பலில் துலாஜி ஆங்க்ரே ரகசியத் திட்டங்களை விவரிக்கிறான். மாக்ரே கொண்டுவரும் பெரிய கப்பல்களைப் பற்றித் தெரிவிக் கிறான். அந்தக் கப்பல்களில் வரும் இரண்டு லட்சம் பவுன்களைப் பற்றித் தகவல் அறிவிக்கிறான். பங்கு பிரிப்பது பற்றிக் கொள்ளைக்காரர்களுக்குள் பலத்த விவாதம் எழுகிறது.

சிந்து துர்க்கத்தி லுள்ள கோயில்களைப் பற்றிக் கொள்ளைக்காரர்கள் இழிவாகப் பேசியது கடல் ராணிக்கு ஆத்திரத்தை மூட்டுகிறது. சிவாஜி மகாராஜா வின் பெருமையை அவர்களுக்கு எடுத்துரைக்கிறாள்.

அன்று கடல்ராணி சிந்து துர்க்கக் கடலில் நீந்தச் செல்கிறாள். ஈர உடை மாற்றி வந்த கடல்ராணி பொய்த்துயிலில் ஆழ்ந்துள்ளாள். இந்திரஜித் அனந் தைப் பார்க்கிறாள். அவளுக்கு அருகில் நெருங்கிய போது சட்டென்று அவளைச்சுற்றிவளைத்துச் சிறைப் படுத்துகிறான் அனந்த். பிறகு அவள் நிம்மதியைக் குலைக்க வந்த ஸ்டான்டன், ஸ்மித் இருவரையும் அனந்த் ஏற்கெனவே கட்டிப்போட்டுப் பள்ளத்தில் உருட்டி வைத்திருப்பதை ராணி பார்க்கிறாள். அவர்கள் கட்டுக்களை அவிழ்த்து விடச் சொல்கிறாள் ராணி. இருவரையும் கடலில் தூக்கியெறிந்து பாண்டவ கட்டுக்கு நீந்திச் செல்லச் சொல்கிறான் அனந்த்: அவர்களைத் தூக்கியெறிந்த விதத்தைப்பற்றிக் கடல் ராணி கேட்டபோது அவளையும் தூக்கிச் சுழற்றி ''ஆகாய ராணி'' என்று வர்ணிக்கிறான் அனந்த்.

மேலேதொடர்ந்து படியுங்கள்.

## அத்தியாயம் 29

# புதிர்கள்

ஏதோ குழந்தையைத் தூக்குவதுபோல் அலட்சியமாக ராணியைத் தனது இரு கைகளாலும் தலைக்கு மேல் தூக்கி அவளுக்கு ஆகாய ராணி என்ற பட்டத்தையும் சூட்டிய அனந்த், தனது வர்ணனையை நிரூபிக்க அவளை அப்படியே ஆகாய மார்க்கத்தில் கடலை நோக்கி விட்டெறிந்தான். உச்சி வேளை சூரியனின் கதிர்களில் டாடளத்துத் தேவலோகத்திலிருந்து வேகமாக இறங்கி வரும் அப்ஸரஸ் போல் மின்னிக் கொண்டு கடலுக்குள் இறங்கிவிட்ட ராணியை நோக்கிய அனந்த், பாறையின் முகப்புக்கு வந்து தானும் கடலுக்குள் தலை கீழாகப் பாய்ந் தான். அப்படிப் பாய்ந்தவன் மறு விநாடி நீர் மட்டத்துக்கு மேல் வந்து தன்னருகில் நீரில் கால்களை உதைத்து ஆரம்ப நாள் போலவே அலைகடல் தாமரையாக நின் றிருந்த ராணியை நோக்கி, ''ராணி! நீந்திச் செல். நானும் உடன் வருகிறேன்'' என்று கூறி நீரில் சரேலென்று மூழ்கினான். அவன் எதற்காகக் கடல் நீரில் விட்டெறிந்தான், எதற்காக எங்கு நீந்தி விரையச் சொல்கிறான் என்பதை அறியாத ராணி, ஓரளவு அவன் எண்ணத்தை ஊகித்துக் கொண்டு பதிலேதும் சொல்லாமலும் கேள்வி ஏதும் கேட்காமலும்

---

அழகான பெண்ணை, ஆண் மகனைச் சாந்தமாக்கவே படைத்திருக் கிறான் இறைவன். பெண்கள் இல்லாவிடில் ஆண்கள் வெறும் மிருகங் களே!

-தாமஸ் ஆட்வே

நீருக்குள் மூழ்கி பாண்டவர் கோட்டையை நோக்கி நீந்தினான். அவன் நீருக்குள் வந்ததும் அனந்த் ஒரு கையால் அவள் இடையை இழுத்து அணைத்துக் கொண்டு ஒரு கையையும் கால்களையும் மட்டும் உபயோகித்து நீந்தினான். நீச்சலில் யாருக்கும் சளைக்காத கடல் ராணியும் அவனுடன் இணைந்து நீந்தினாள் நீருக்குள். இணைந்த சமயத்தில் அவன் கை தனது உடலில் செய்த சேஷ்டைகளையெல்லாம் சகித்துக் கொண்டாள். சகித்துக் கொண்டாளா விரும்பி ஏற்றுக் கொண்டாளா என்பது அவளுக்கே புரியவில்லையானாலும், அனந்த் தன்னை அநாயாசமாகத் தூக்கி வெள்ளையர் இருவரை எறிந்தது போலவே தன்னையும் நீரில் எறிந்துவிட்டானே என்ற கோபம் மட்டும் அவனையும் மீறி உள்ளத்தே எழுந்ததால் சில சமயங்களில் அவன் கையைப் பிடித்துத் தள்ளினாள். ஆனால் அந்த முரட்டுக் கை விலகுவதாகக் காணோம். திரும்பத் திரும்ப அவளுக்கு இன்ப இம்சைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தது. சிற்சில வேளைகளில் ஒற்றைக் கை நீச்சலின் கஷ்டத்தின் காரணமாக விலகவும் செய்தது. அப்படி அகன்ற சமயத்தில் ராணி சரேலென்று கடல் மட்டத்துக்குக் கிளம்பி இரு கைகளையும் மாறி மாறிப் போட்டு நீந்தி வெகு வேகமாகச் சென்றாள். ராணி விடுபட்டுப் போவதை உணர்ந்த இந்திரஜித்தும் கடல் மட்டத்துக்கு வந்து அவளைப் பிடிக்க விரைந்தான்.

ஆனால் ராணியைப் பிடிக்க அவனால் முடியவில்லை. முன்னே சென்ற ஸ்டாண்டனையும் ஸ்மித்தையும் தாண்டிச்சென்றுவிட்ட ராணியின் வேகத்தைத் தவிர இடையே தாறுமாறாக நீந்திக் குறுக்கே வந்து தன் வேகத்தைத் தடுத்துவிட்ட அந்த இரு வெள்ளைக்காரர்களாலும் வேகம் தடைப் பட்டதால், ராணிக்கு மிகவும் பின்பாகவே அவனால் நீந்த முடிந்தது. இந்த நீச்சல் போட்டியைக் கோட்டைச் சுவர்களின் மீதிருந்து ரசித்த காஸண்ட்ரா மாலுமிகளும் மால்வான் வீரர்களும் அனந்த் தோல்வியடையத் தொடங்கியதும் பெரிதும் கரகோஷம் செய்தார்கள். ஆரவாரித்தார்கள். முன்னே சென்று கொண்டிருந்த ராணி கூடசற்றுத் தூரத்தில் வேகமாக வந்து கொண்டிருந்த அனந்தைப் பார்த்து நகைத்துவிட்டு வேகமாக நீந்திச் சென்று வெகு சீக்கிரம் கரையேறிவிட்டாள். அவள் கரையில் காலை வைத்த சில நிமிடங்களுக்குள்ளாகவே அனந்தும் தரையை அடைந்தானாயினும் அவன் தோல்வியைக் கண்டு சிந்து தூர்க்க மாலுமிகள் மட்டுமின்றி பாண்டவர் கோட்டையின் கரை யோரத்திலிருந்த படகோட்டிகளும்கூடச் சிரித்தார்கள்.

ஆனால் அனந்த் யார் சிரிப்பையும் லட்சியம் செய்யாமல் கரையேறியதும் ராணி எங்கே என்று சுற்று முற்றும் நோக்கினான். ராணியை எங்கும் காணாததால் எப்படியும் அவள் தென்னஞ் சோலையை அடைந்திருப்பாள் என்ற நினைப்பில் அதை நோக்கி நடந்து அதற்குள் நுழைந்தான். அங்கும் ராணியைக் காணாததால் தனது சட்டையைக் கழற்றிப் பிழிந்து அதனாலேயே தலையைத் துவட்டிக் கொண்டான். பிறகு அதைச் சற்று எட்ட இருந்த முந்திரிச் செடி மீது விட்டெறிந்து விட்டு நின்ற வண்ணமே தனது சராய்களைப் பிழிந்து விட்டுக் கொண்டு தென்னஞ் சோலைக்குள் மேலும் நுழைந்தான். சோலையில் பல இடங்களில் திரும்பியும் ஆராய்ந்தும் ராணி சென்ற சுவடு அடியோடு தெரியவில்லை. மணலில் இரண்



டொரு இடங்களில் அவள் காலடிகளும் சேலையிலிருந்து சொட்டிய நீரை உறிஞ்சிய இட்டுக்களும் தெரிந்தாலும் அவையும் திடீரென்று மறைந்து விட்டன.

ராணி அத்தனை பட்டப் பகலில் எப்படி அந்தச் சோலையிலிருந்து மறைந்திருப்பாள் என்பதை எண்ணி எண்ணிப் பார்த்தும் விடை காணாததால் அவன் வந்த வழியை நோக்கித் திரும்பிய சமயத்தில்தான் அந்தக் களுக்கென்ற சிரிப்பு அவன் காதில் விழுந்தது. சிரிப்பொலி கேட்டுத் திடீரென்று திரும்பியவன் கண்களுக்கு அக்கம் பக்கத்தில் இரண்டு முந்திரி மரங்களும் அவற்றை அடுத்து அடர்ந்த தென்னை மரங்களும் தெரிந்தனவே யொழிய ராணி கண்ணுக்குத் தெரியாததால், "ராணி! எங்கிருக்கிறாய்?" என்று இரைந்து கேட்டான்.

பதில் ஏதும் கிடைக்கா விட்டாலும் பக்கத்திலிருந்து குயிலின் ஒலி ஒன்று கேட்டதல்லாமல் சிவந்த முந்திரிப் பழமொன்றும் அவன் மார்பைத் தாக்கவே "அப்படியா சமாசாரம்?" என்று உரக்கக் கேட்டுக் கொண்டே தாழ இருந்த முந்திரிக் கிளையில் பாய்ந்து அடர்த்தியான இலைகளைப் பிரித்தான். அவற்றின் மறைவில் ராணி நின்று கொண்டிருந்தாள். அந்தக் காட்சியில் அவன் மெய் மறந்து சிலையென நின்று விட்டான்.

ராணி தனது நனைந்த சேலையில் ஒரு பகுதியைக் கட்டிக் கொண்டு மீதி முக்கால் பகுதியைப் பிழிந்து உதறிப் பக்கத்துக் கிளையில் உலர்த்தி யிருந்தாள். சேலையின் சின்னஞ் சிறு பகுதி மட்டும் இடையிலும் மார்பிலும் சுற்றப்பட்டு மார்பில் செருகப்பட்டிருந்ததால் அவள் அழகிய மார்பின் எழுச்சி மறைக்கப்பட்டிருந்தாலும், அதன் மேல் பகுதி கழுத்து வரையில் மிக வெண்மையாகக் காட்சி யளித்தது. மார்பை மறைக்கச் சேலை இறுக்கப்பட்டிருந்தாலும் இரட்டை அழகுகளின் மேல்புறம் மூன்றாம் பிறைச் சந்திரனைப் போல் அழகாக அவற்றுக்கு விளிம்புகளை அமைத்துத்தானிருந்தது. சேலை மறைத்திருந்த முக்காலே அரைக்கால் பகுதியும் அந்த விளிம்புகளும் ராகு கேதுக்கள் சந்திரனின் பெரும் பாகத்தை விழுங்கிய நிலையை நினைவூட்டின. விஷமத்தால் மின்னிய கருவிழிகள் இந்திரஜித்தின் இதயத்தில் உண்டு பண்ணியது கோபமா, இன்பமா? அவனுக்கே புரியவில்லை அது. இடையில் சுற்றியிருந்த சேலையின் அகலத்தில் பாதி மார்பில் ஏறியிருந்ததால் வெண்ணிறக் கால்கள் முழந்தாளுக்கு மேலும் அரைவாசி தெரிந்ததால் கடல் ராணியின் மெல்லிய கைகளை முழங்காலுக்கு மேலிருந்த இரண்டு வாழைத் தண்டுகள் சரிப்படுத்தி விட்டதையும், அந்தத் தண்டுகளில் தட்டிய சிறிது சிவப்பு, வெட்கத்தால் சிவக்கக் கூடியது கன்னம் மட்டுமல்ல வென்பதையும் நிரு





மனித அன்பின் பிறப்பிடம் தாய் -பெல்ஜியப் பழமொழி

பித்ததால் அவை இரண்டையும் தழுவி விட அனந்தின் கைகள் துடித்தன. கண்ட கண்கள் இதய வேகத்தை அதிகப்படுத்தின.

அப்படி அவன் தனது அங்கங்களை, முக்கிய பகுதிகளை ஊன்றிப் பார்ப்பதை ராணியும் கவனித்து இருக்க வேண்டும். ஆகவே கால்களை ஒன்றின் மீது ஒன்று மாற்றிப் போட்டுக்கொண்டு நடன பாணியில் நின்றாள். அதனால் அனந்தின் இதய வேகம் குறைவதற்குப் பதில் அதிகப்படவே செய்தது. கால்களை மாற்றி இணைத்ததால் ஒரு காலின் மேற் பகுதியை மறைத்த சேலை சிறிது அகலவே இந்திரஜித் கயநிலை, பண்பாடு எல்லாவற்றையும் காற்றில் பறக்க விட்டு ராணியை அணுகி அவள் தோள்கள் மீது கையை வைத்தான். அவள் உலர்த்திக் கொண்டிருந்த சேலையின் முந்தானையை எடுத்து அவள் முகத்தைத் துவட்டினான். அவள் குழலைப் பிழிந்து முந்தானையைத் தலையில் சுற்றிக் கட்டினான். அந்த நிலையில் அவளைப் பார்த்து, ''ராணி! இப்பொழுது எத்தனை அழகாய் இருக்கிறாய் தெரியுமா?'' என்று கேட்டான்.

ராணி புன்முறுவல் கொண்டாள் ஒரு விநாடி. பிறகு இதழ்களை மடித்துச் சிரித்தாள் கேலியாக.

''ஏன் சிரிக்கிறாய் ராணி?'' என்று வினவினான் அனந்த்.

''பெண்களைப் பக்குவப்படுத்தப் பலவித வித்தைகளைக் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள்'' என்ற ராணி முந்திரிக் கிளையில் உட்கார்ந்தாள்.

இந்திரஜித் அவள் எதிரிலிருந்த கிளையில் உட்கார்ந்தான். ''ராணி...'' என்று துவங்கியவன் ஏதும் சொல்லாமல் மௌனியானான்.

''சொல்லுங்கள்!'' ராணி ஊக்கினாள் அவனை.

அவன் பேசவில்லை. எதிரே முந்திரிக் கிளையில் ஆடிக் கொண்டும், தரையை அவ்வப்போது தொட்டுக் கொண்டுமிருந்த ஒரு காலின் தொடையில் கையை வைத்தான். அவள் காலை இழுத்துக் கொள்ளவுமில்லை, அவன்கையை எடுத்தெறியவுமில்லை. வாயைத் திறக்கவுமில்லை. ஆகவே அனந்தே அழைத்தான் ராணியை ''ராணி!'' என்று.

''என்ன?'' தைரியமாக எழுந்தது அவள் கேள்வி.

''உன்னை ஏன் இங்கு கொண்டு வந்தேன் தெரியுமா?'' என்று வினவினான் இந்திரஜித்.

உலகத்திலேயே, இத்தாலியப் பெண்கள்தாம் மிகப்பெரிய ''ப்ரா''க்களை அணிகிறார்கள்! மிகச் சிறிய ''ப்ரா''க்களை அணிபவர்கள் ஜப்பானியப் பெண்மணிகள் என்று தெரிகிறது! —சாவித்திரி



பதிலுக்குச்சிரித்தாள் ராணி. ''நீங்கள் கொண்டு வந்தீர்களா?'' என்றும் வினவினாள்.

''வேறு யார் கொண்டு வந்தார்கள்?'' குழப்பமிருந்தது அனந்தின் கேள்வியில்.

''நானாக வந்தேன். என் இஷ்டத்தை மீறி யாரும் என்னை எங்கும் கொண்டு செல்ல முடியாது'' என்று ராணி மிக உறுதியுடன் கூறினாள்.

இந்திரஜித் அனந்தின் கண்களில் வியப்பின் சாயை விரிந்தது. ''உன்னைக் கடலில் தூக்கிப் போட்டது யார்?'' என்று கேட்டான் அனந்த்.

''நீங்கள்'' என்றாள் அவள் அலட்சியத்துடன்.

''அதனால்தானே நீ இங்கு வர முடிந்தது?'' என்று வினவினான் இந்திரஜித்.

''இல்லை.''

''என்ன இல்லை?''

''நீங்கள் கடலில்தான் தூக்கிப் போட்டீர்கள். நான் இஷ்டப்பட்டிருந்தால் சிந்து துர்க்கத்தைச் சுற்றி நீந்தி அங்கு கரையேறிக் கோட்டைக்குள் போயிருக்க முடியும்.''

இதைக் கேட்ட அனந்த் மலைத்தான். ''ஆம். அப்படி நீ செய்திருக்க முடியும்'' என்று ஒப்புக் கொள்ளவும் செய்தான்.

''அப்படிச் செய்யவில்லை'' என்பதை அவள் சுட்டிக் காட்டினாள்.

''ஆம். ஆனால்... ஏன்?''

''நீங்கள் என்னுடன் தனித்துப் பேச இஷ்டப்பட்டீர்கள்'' என்று அறிவித்தாள் ராணி.

அனந்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''என் எண்ணம் இவளுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான்.

அவன் மனத்தில் ஓடிய எண்ணத்தை அவள் புரிந்து கொண்டிருக்க வேண்டும். ''நீங்கள் பழையபடி சிந்து துர்க்கத்தின் வெளி அறையில் தூங்கிக் கொண்டிருந்த போதே அதை உணர்ந்து கொண்டேன்'' என்று கூறிய ராணி மேலும் தொடர்ந்து ''சிந்து துர்க்கத்தில் காலண்ட்ராவை நங்கூரம் பாய்ச்சி அந்தக் கொள்ளைக்காரர்களைக் கோட்டையில் உலாவ விட்டதிலிருந்து தனித்துப் பேச நீங்கள் முயன்றிருக்கிறீர்கள். முடியவில்லை. ஆகவே நான் நீராடச் சென்றதும் தொடர்ந்து வந்திருக்கிறீர்கள். நீண்ட நேரம் நான் நீந்தி விட்டதால் அங்கு வந்த ஸ்டாண்டனும் ஸ்மித்தும் உங்கள் தனிமையைக் கெடுத்தார்கள். அதனால் சினந்து அவர்களைக் கட்டி உருட்டினீர்கள். பிறகு கடலில் எறிந்தீர்கள்'' என்று முடித்தாள்.

இங்கு இந்திரஜித் தனது சாமர்த்தியத்தைக் காட்டினான். ''ஸ்டாண்டனையும் ஸ்மித்தையும் அகற்றிய பிறகு உன்னுடன் நான் பேசியிருக்கலாமே?'' என்று வினவினான்.

''அவர்களைக் கடலில் எறிந்ததை எல்லோரும் பார்த்திருக்கிறார்கள். ஆகவே அதற்குப் பிறகு நாம் அங்கே தங்கினால் டெய்லரும் இங்க்லண்டும் சந்தேகப்பட்டு நம்மைத் தேடி வருவார்கள்'' என்று பதில் சொன்னாள், ராணி.

ராணியின் புத்தி கூர்மையை உள்ளூற வியந்த இந்திரஜித் ''ஏன்? அவர்கள் இங்கு வரமாட்டார்களா?'' என்று வினவினன்.

''வரமாட்டார்கள். வந்தால் அவர்கள் கப்பலிலிருந்து நீண்ட தூரம் வரவேண்டும். அங்கு கப்பலைத் தனியாக விட்டால் ஏற்படக் கூடிய விளைவுகளை அவர்கள் அறியாதவர்களல்ல. காப்டன்கள் இங்கு வந்ததும் சிந்து துர்க்கத்தின் பீரங்கிகளை நமது காவலர் கப்பலை நோக்கித் திருப்பினால் காஸண்ட்ரா நமது கைவசப்படும். அப்புறம் அவர்கள் கதி அதோ கதி. இதனால்தான் காஸண்ட்ரா மாலுமிகள் பலரைச் சிந்து துர்க்கத்தின் கோட்டைச் சுவர்கள் மீது இங்க்லண்ட் உலாவ விட்டிருக்கிறான். அவனும் டெய்லரும், வில்வரும் கூட சிந்து துர்க்கத்துக்குள் உலாவி வருவதும் காஸண்ட்ராவைப் பாதுகாக்கத்தான்'' என்று விளக்கினான்.

இந்திரஜித் அனந்த் அவள் சொல்வதையெல்லாம் தலை குனிந்து கேட்டுக்கொண்டிருந்தான். அவள் தொடையில் வைத்த கையைக் கூட எடுத்துத் தனது தொடையில் வைத்துக் கொண்டான். இரு கைகளும் தனது தொடைகளில் கடுமையாக ஊன்றிக் கிடக்க, முரட்டுக் குழல்கள், ராணியின் விழிகள் முன்பு அலங்கோலமாகக் காட்சியளிக்கக் குனிந்த தலை நிமிராமல் நீண்ட நேரம் சிந்தனை வசப்பட்டிருந்த இந்திரஜித் முடிவில் தலையை நிமிர்த்தி, ''ஆம். ராணி! நீ சொன்னது முற்றிலும் சரி. இதையெல்லாம் நானும் யோசித்தேன். அதனால்தான் இங்கு பேசலாம் என்று முடிவு செய்தேன்'' என்று கூறினான்.

''என்ன பேச நினைத்தீர்கள் சொல்லுங்கள்'' என்றாள் ராணி.

''இந்த இடத்தை விட்டு நான் போய் விட வேண்டும்'' என்று ஒரு அதிர்ச்சி வெடியை வீசினான் அனந்த்.

சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்த ராணி தனது கண்களால் வினாக்களைத் தொடுத்தாள். அவள் கண்களின் வினாக்களுக்குப் பதில் கூறினான் அனந்த். ''என் முதல் வேலை முடிந்தது'' என்று சொன்னான்.

ராணியின் முகத்தில் சிந்தனை விரிந்தது. ''என்ன வேலை அது?'' என்று வினவினாள்.

''காஸண்ட்ராவைச் சிந்து துர்க்கத்துக்குள் இழுப்பது'' என்றான் அனந்த்.

''அதற்காகத்தான் இங்கு வந்தீர்களா?'' என்று வினவினாள் ராணி.

''என் வேலையின் முதல் படிதான் அது'' என்றான் இந்திரஜித்.

''பெரிய திட்டமிட்டு வந்திருக்கிறீர்களா?'' ராணியின் குரலில் கடுமை இருந்தது.

''திட்டமிடாமல் எதையும் செய்வதில்லை''

''புரிகிறது.''

''என்ன புரிகிறது?''

''திட்டமிட்டு வேலை செய்வது.''

''எப்படிப் புரிகிறது?''

''திட்டமிட்டு என்னைக் கடலில் தூக்கிப் போட்டதிலிருந்து.''

''புரிந்து என்ன செய்யப் போகிறாய்?''

''முழுத் திட்டத்தையும் புரிந்து கொள்ளப் போகிறேன்.''





கணவன்: நீ லேடீஸ் ஸ்பெஷல் பஸ் கண்டக்டரா இருக்கலாம். அதுக்காக வீட்டுக்குள்ளே ''விசில்'' அடிக்கிறது நல்லா இல்லே கமலா!...

''அதை இப்பொழுது சொல்வதற்கில்லை.''

''என்னிடம் நம்பிக்கை இல்லையா?''

இந்திரஜித் சில விநாடிகள் மௌனம் சாதித்தான். பிறகு சொன்னான்: ''நம்பிக்கை இல்லாமல் இல்லை ராணி. ஆனால் முழுத் திட்டம் என் மனத்துக்கே திட்டமாகப் புலப்படவில்லை. ஆகையால் உனக்குச் சில விஷயங்களைச் சொல்ல இங்கு அழைத்து வந்தேன்.''

ராணி அவனை வேறு புறம் திரும்பச் சொல்லிவிட்டு சரேலென்று சேலையை உடலில் வெகு வேகமாகச் சுற்றிக் கொண்டாள் ஒரு முறை சுழன்று. அரை குறையாகச் சுற்றினாலும் சேலை முழுதும் உடலை மறைத்தது. மறைத்தவுடன் ''திரும்புங்கள்'' என்று ராணி பணிக்கத் திரும்பினான் இந்திரஜித். ''இப்போது சொல்லுங்கள்'' என்றாள்.

அனந்த் சிறிது யோசித்துவிட்டு ''இன்றிரவு சிவாஜி மகாராஜாவுக்கு அபிஷேகம் அல்லவா?'' என்று கேட்டான்.

''ஆம்'' என்றாள் ராணி.

''அதற்குப் பிறகு சிந்து துர்க்கத்தில் கோட்டைக்குள் இருக்கும் மகாராஜா இருந்த காலத்தில் இங்கு வரும்போதெல்லாம் தங்கிய சிறிய அறை இருக்கிறதல்லவா?''

''ஆம்.''

''அந்த அறைக்கு வந்து சேர்.''

''வந்தால்?''

''நான் மட்டும் இருப்பேன்.''

''இருந்தால்?''

''உன்னையும் என்னையும் உள்ளே விட்டு வெளியே பூட்டி விடச் சொல்வேன்'' என்றான் அனந்த்.

தீப்பொறி பறந்தது ராணியின் கண்களில். ''என்ன விளையாடுகிறீர்களா? என் தந்தை இருக்கிறார் அங்கே'' என்று ராணி சீறினாள்.

''தந்தையே அந்த அறைப் பூட்டைப் பூட்டுவார்'' என்றான் இந்திரஜித்.

''உங்களுக்குப் பைத்தியமில்லையே?'' என்று வினவினாள் ராணி.

''இன்றிரவு புரிந்து கொள்வாய்'' என்றான் அனந்த். ''வந்த விஷயத்தைச் சொல்ல மறந்து விட்டேனே. அந்த அறைக்குள் செல்லும் நான் அன்றிரவே மறைந்து விடுவேன்'' என்றும் கூறினான்.

அவன் சொன்னதெல்லாம் பெரும் புதிராக இருந்தது ராணிக்கு. ஆனால் அந்தப் புதிரை யெல்லாம் தாக்கி யடித்தன அந்த இரவின் விசித்திர நிகழ்ச்சிகள். (தொடரும்)

பெண்ணின் உருவ அழகைவிட அறிவே கவர்ச்சியானது.

-காண்டேகர்





# கார் ரேஸில் காரிகையர்!

(சோழவரம் கார் பந்தயத்தில் கலந்து கொண்ட ஸ்ரீமதி இந்திரா சந்தோக்கும் ஸ்ரீமதி ராதாமணி முத்துகிருஷ்ணனும் ஸ்ரீமதி இந்திரா சுப்பிரமணியமும் சந்திக்கிறார்கள். மூவரும் கார் பந்தயம் பற்றிக் கருத்துப் பரிமாறிக் கொள்கிறார்கள்.)

ராதாமணி: எனக்குப் பதினேழு வயதில் சிறு கார் ஆக்ஸிடெண்ட் ஏற்பட்டது. அதிலிருந்து ஏற்பட்ட நடுக்கத்தைப் போக்கவே கார் பந்தயத்தில் கலந்துகொள்ள முடிவு செய்தேன். முதல் தடவையாகக் கலந்துகொண்ட இந்தக் கார் பந்தயத்திலேயே எனக்கு முதல் பரிசு கிடைத்தது! எனது நடுக்கம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது!

இந்திரா சந்தோக்: நான் 1976, 1977, 1978, 1980 ஆகிய வருடங்களில் கார் பந்தயங்களில் கலந்து கொண்டிருக்கிறேன். 1976ம் வருஷம் முதல் பரிசு பெற்றேன். அதன் பிறகு எல்லாப் பந்தயங்களிலும் இரண்டாவது பரிசுதான். அப்போதெல்லாம் பணமும் புடவையும் பரிசாகக் கிடைத்தன. இந்தத் தடவை என்னமோ கோப்பையைப் பரிசளித்திருக்கிறார்கள்!

இந்திரா சுப்பிரமணியம்: கார் ரேஸிங் என் ரத்தத்தோடு கலந்திருக்குன்னு சொல்லலாம். என் தந்தை நீலகண்டன் கிராண்ட் ப்ரீ பந்தயத்தில் இரண்டாவது பரிசு பெற்றிருக்கிறார். என் சகோதரன் ஜெயசந்திரன் கார் ரேஸ் விற்பன்னர். தமிழ் நாட்டில் எல்லா இடங்களுக்கும் காரில் செல்லும் ஸவுத் இந்தியன் ராலே பந்தயத்தில் கலந்து கொண்டு ஆறுதல் பரிசு பெற்றிருக்கிறேன்.

ராதாமணி: மிஸஸ் சந்தோக்! உங்கள் காரோடு இரு கார்கள் மோத வந்ததாகக் கேள்விப்பட்டேனே, அது உண்மையா?

இந்திரா சந்தோக்: ஆமாம்! என் காரில் மோத வந்த கார்களுடன் இடி படாமல் முதலில் பாதுகாப்பாக ஓட்டிச் சென்றேன். என் காரில் மோத வந்த பெண்மணியின் காருக்கு டயர் பழுதாகிவிட்டதாம்! நல்ல காலம்! ஆக்ஸிடெண்டிலிருந்து தப்பினேன்!

ராதாமணி: எனக்குப் பந்தயத்துக்கு முதல் நாள் பயிற்சியாளர் டிசௌஸா கொடுத்த கடைசி நிமிஷ யோசனைகளை மறக்க முடியாது! அவர் கொடுத்த பயிற்சிகளினால்தான் நான் நம்பிக்கையோடு போட்டியிலே கலந்துக்கிட்டேன். அதோடு முந்தின நாள் பயிற்சி வேளையிலே என் கார் பழுதுபட்டுப் போச்சு. அன்றைக்கு இரவு முழுதும் காரை ஒர்க் ஷாப்பிலே மெக்கானிக்குகள் கண் விழிச்சு ரிப்பேர் செய்து கொடுத்திருக்கலேன்னு நான் இந்தப் போட்டியில் கலந்து கொண்டு பரிசு பெற்றிருக்கவே முடியாது!

இந்திரா சந்தோக்: இந்தச் சமயத்திலே எனக்கு முந்தின போட்டியிலே ஏற்பட்ட அனுபவம் நினைவுக்கு வருது. கார் பந்தயத்தின் போது என் காரின் முன் பக்கக் கதவு கழன்று விழுந்துட்டது. அப்படி இருந்தும் அந்தப் போட்டியிலே சமாளிச்சுப் பரிசு பெற்றேன்!

ராதாமணி: மோட்டார் சைக்கிள் பந்தயத்திலே ஆண்களோடு போட்டியிட்ட மிஸ் நிஷா சுதாரியாவின் தைரியத்தை ரொம்பப் பாராட்டறேன்! அவ்வளவு துணிச்சல் யாருக்கும் வராது!

இந்திரா சந்தோக்: நிஷாவுக்குக் கல்யாணம் ஆனப்புறமும் இந்தத் துணிச்சல் தொடர்ந்திருக்குமா?

இந்திரா சுப்பிரமணியம்: ஏன் நாம் மூணு பேரும் கல்யாணமான பிறகு கார் ரேஸில் கலந்துக்கிடலியா? இப்போ நிறையப் பெண்கள் 'மொபெட்' ஓட்டிப் பழகியிருக்காங்க. அவர்களில் முப்பது பேரை வரவழைத்து மொபெட் போட்டி நடத்தலாம்!

இந்திரா சந்தோக்: நல்ல யோசனை! பம்பாயிலிருந்து வந்துள்ள நிஷா தைரியமா மோட்டார் சைக்கிள் பந்தயத்திலே கலந்துக்கிட்டு வழிகாட்டியிருக்காங்களே!

தொகுப்பு: குண்டுமணி

படங்கள்: விக்கு, பிரீமியர் ஃபோட்டோ

⌘ மிஸ் நிஷா சுதாரியா



# புஷ்பா தங்கதுரை



# கடலுக்குள் ஜூலி

**முன்கதைச் சுருக்கம்**

கனிநாகலாபுரம் கிராமத்தில் மண் அரிப்பு ஏற்பட்டதில் மூன்று எலும்புக் கூடுகளும், ஒரு உலோக பாட்ஜும், குழாயும் கிடைக்கின்றன. பாட்ஜில் எச். எம். எஸ். ஜே. என்று போட்டிருப்பது மல்லிக்கைக் கவர்கிறது.

எச். எம். எஸ். ஜூலி காலண்ட் என்ற பிரிட்டிஷ் கப்பல் 1841ல் ஏராளமான தங்கம் வெள்ளி சரக்குகளுடன் இந்தியாவுக்கு வரும் வழியில் காணாமல் போய்விட்டது அவனுக்குத் தெரியும். இதை டில்லான் வொல்ட் என்ற ஆங்கிலேயர் மூலம் அவன் அறிந்திருந்தான்.

இப்போது அந்தக் கப்பல் கனி நாகலாபுரம் அருகில் வந்து மூழ்கி இருக்க வேண்டும் என்று மல்லிக் நிச்சயம் கொள்கிறான்.

அந்த ஊரைத் தேடிப் போகிறான். கோவில் அர்ச்சகர் பெண் சம்பகா அவனுக்கு உதவி புரிகிறாள்.

ஆனால், மண் அரிப்பைத் தடுக்க வந்திருக்கும் அரசாங்கப் பணியாளர்கள் அவனிடம் விரோதம் காட்டுகிறார்கள்.

முதல் தடவை வெற்றி ஏதும் காணாமல் திரும்பிய மல்லிக் தன் நண்பன் கோபியுடன் கலந்து ஆலோசிக்கிறான்.

ஜூலி காலண்ட் கப்பல் இந்தியா வந்ததற்கான தடயங்கள் மேலும் கிடைத்திருப்பதை அவனிடம் கூறுகிறான்.

கோபிக்கும் ஒரு சுவாரஸ்யம் ஏற்பட்டு இருவரும் அந்தக் கிராமம் போகிறார்கள்.

அந்தப் பெண்ணின் உதவியை நாடுகிறார்கள். உலோக பாட்ஜைப் பார்ப்பதற்கு ஏற்பாடு செய்தால் நல்லது என்று தெரிவிக்கிறார்கள். அவள் உதவி செய்ய மறுக்கிறாள்.

சோர்ந்து போய் ஓர் ஓடைக் கரையில் மல்லிக் உட்கார, அந்தப் பெண் சம்பகா அவனைத் தேடி வருகிறாள்.

## இனி இவ்வாரக் கதை

எங்கே தச்சர்கள்? என்று பால்மர்ஸன் கேட்டபோது, — ஏன் எதற்கு வேண்டும்? என்றார் வில்லியம் எஸ்டன். அவர்தான் கப்பலின் மாஸ்டர்,

கேப்டனுக்கு அடுத்தபடியானவர்.

- இங்கே வெளிச்சமும் காற்றும் இல்லை; ஹாலில் ஓட்டை போடுங்கள், என்றார் பால்மர்ஸன்.

— காப்டன்! புயல் வருகிறது, கடல் கொந்தளிக்கிறது, இப்போது எதுவும் செய்ய வேண்டாம் ஆபத்து, என்றார் எஸ்டன்.

அதே நேரத்தில் ஸ்கர்வி நோயாளிகளில் ஒருவன்,- காப்டன் எங்களைக் காப்பாற்றுங்கள்! பட்டினி கிடக்கிறோம், செத்துக் கொண்டிருக்கிறோம், என்று கூவ,

எல்லோரும், - நாங்கள் சாகிறோம் காப்டன், என்று கோரஸ் கத்தினார்கள்.

கப்பலின் உணவு விரைவாகக் காலி ஆகிக் கொண்டிருந்தது.

குடிதண்ணீருக்கும் பஞ்சம்.

கப்பலை மோரிஷியஸ் தீவில் நிறுத்தி உணவு, தண்ணீர் யாவும் சேகரித்திருக்க வேண்டும்.

ஆனால் பால்மர்ஸன் அதை விரும்பவில்லை.

மோரிஷியஸில் நிறுத்தினால் பாதி மாலுமிகளும் கரையில் இறங்கி மறைந்து விடுவார்கள். அவ்வளவு கலைப்பில் இருந்தார்கள் அவர்கள்.

இதனால் நிற்காமல் போக,

சேமித்திருந்த உணவும் குடிநீரும் குறைந்து விட்டது.

காப்டன் மேல் தளத்திற்கு ஏறினார்.

அப்போது அங்கே, ஹா, ஹம்மா என்ற அலறல்கள்.

நிமிர்ந்து பார்க்க, கப்பலின் பதினைந்து வயது மாலுமியை (அந்த நாளில் நிறையச் சிறுவர்கள் கப்பலில் வேலை செய்தார்கள்) ஒரு சவுக்கினால் காக்ஸ்வைன் அடித்துக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றிப் பலபேர் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மார்பு மேல் கசைகள் விழ விழ, பையன் கேவலாக ஏங்கிக் கதற,

பால்மர்ஸ்ன் அதைப் பொருட்படுத்தாமல் நடந்து போனார்.

அந்நாளைய ஆங்கிலேயர், மூட நம்பிக்கையில் மற்ற நாட்டினருக்குச் சளைத்தவர்கள் அல்ல.

கப்பலில் ஒரு சிறுவனை நிறுத்தி அவன் மார்புக்கு மேல் கசையடி கொடுத்தால் புயல் நின்று போகும் என்று அவர்கள் நம்பினார்கள்.

கசையடி கொடுக்க,

பையன் துடித்துக்கொண்டிருந்தான்.

### 7

*— கடலா? நான் மாட்டேன். நிச்சயம் கப்பலில் போக மாட்டேன். என்னால் அந்த உணவைச் சகித்துக் கொள்ள முடியாது. அவர்களது ரொட்டி வெறும் பாறை! பல்லில் ஒரு எந்திரம் கட்டித்தான் அதை அரைக்க வேண்டும். இறைச்சியில் இருக்கும் உப்போ, கடவுளே, நாக்கு பத்து நாளைக்கு வேலை செய்யாது.—*

*—பதினாறும் நூற்றாண்டில் ஜான் லில்லி எழுதிய 'கல்லதியா' என்ற நாடகத்தில் ராபின் என்ற பாத்திரம் கூறுவது.*

அந்தப் பெண் கல்மேல், பாண்டுரங்கன் பாணியில் இடுப்பில் கை வைத்து நின்றாள்.

மெல்லிய ஏழைத் தாவணி.



வாழ்க்கையில் நல்ல மனைவி - தெய்வத்தின் அருள் — கெட்ட மனைவி— ஒரு சாபம்.

-ஸிமோ பைத்

ஏழைப் பாவாடை.

உடம்பில் இயற்கை அளித்த செழிப்புகள் அந்தத் துணிகளைத் தாண்டி இரு விழிப்புகள்.

அவள் கண், காமத்தையும் தந்தது, கைவல்யத்தையும் தந்தது.

—வாங்க என்றான்.

வந்தாள்.

உட்கார்ந்தாள்;

ஏழைத் துணிக்கு முரப்பு இல்லை. கால் இடுக்குகளில் ஓடை வழிந்து ஓட, அதைப் பார்க்கும்போது சோகமும் வந்தது, மோகமும் வந்தது.

—எம்மேலே கோபமா? என்றாள் அவள்.

—இல்லையே என்றான் அவன்.

அவள் கை மண்ணைக் கிள்ளியது. —நீங்க வருத்தத்தோடு போனீங்க! எனக்கு என்னவோ போல இருந்தது. வந்துட்டேன். நீங்க அந்த பாட்ஜைத்தானே பார்க்கணும்கிறீங்க? எங்க வீட்டுலே கொண்டு வச்சிருக்கேன். வந்தாப் பார்க்கலாம்; என்றாள்.

சுருக்கென்று நிமிர்ந்தான். ஒரே பரபரப்பு!

—உங்க வீட்டிலயா?

—ஆமாம்.

—எப்படிக் கொண்டு வந்தீங்க?

—பாட்ஜ் ஓரத்திலே பூ டிசைன் போட்டிருக்கு. அதைக் காப்பி பண்ணணும்னு கேட்டேன். கிருஷ்ணன் கொடுத்திட்டாரு. நீங்க வேணும்னு சுருக்க வந்து பாருங்கோ!

விருட்டென்று எழுந்தான். கோபி போன திசையைப் பார்த்தான். காத தூரத்துக்குக் காணவில்லை.

அவளுடன் நடையைக் கட்டினான்.

ஒற்றையான தடம்.

இருபுறமும் பச்சை விநோதங்கள்.

நடுவில் தெம்மாங்கு போல் அவள் மிதந்து போக, அவன் பின்பற்றினான்.

வீட்டை அடைந்தார்கள்.

—வாங்க, உள்ளே, என்றாள்.

செருப்பைக் கழற்றி உள்ளே போனான்.

ரேழியில் சாம்பல் பூசிய வெளிச்சம். கீழே ஊஞ்சலைப் படுக்க வைத்திருந்தது. அதில் கரை வேட்டியைப் பரப்பி, அர்ச்சகர் சயனித்திருந்தார். எழுபது இருக்கும். அதைவிட அதிகமாகக் காட்டினார். கஷாயமும் கஞ்சியும் வியாதி நெடி வீசின.

—உட்காருங்கோ.

அர்ச்சகர் அவனைப் பார்த்துக் கொஞ்சம் குசலம் காட்டிக் கண்களை மூடினார்.

உள்ளே பாவுக்குள் சென்று அவள் ஒரு துணி மூட்டையைக் கொணர்ந்தாள்.

மெள்ளப் பிரிக்க, மல்லிக்கின் நாடி டபடபவென்று பேசியது.

கடைசி மடக்குகளை நீக்கியதும் அந்த ஐந்து அங்குல பாட்ஜ் உற்பத்தியாகியது.

மல்லிக்கின் உச்சி பறந்தது. குளிர் பிய்த்து ஓடியது. பரபரப்புடன்-கொண்டாங்க, என்று கையில் வாங்கினான். கண்கள் பூத்து வெளியே வர, ஆராக் காதலுடன் அதை உற்று நோக்கினான்.

அது ஒரு எபாலெட். தோளில் அணிவது.

பித்தளையில் செய்திருந்தது.

ஒரு நூற்றாண்டுக்கு மேல் கடலில் ஊறியதில் அரிப்பு எடுத்திருந்தது.

ஆச்சரியம்!

அதன் பார்டரும் அதைச் சுற்றிய பூக்கொடி வேலையும் இன்னும் துல்லியம் காட்டின.

பாட்ஜுக்குள் அந்த எழுத்துக்கள்!

எச். எம். எஸ். ஜே....

'ஜே'யைத் தாண்டிக் கிட்டத்தட்ட மூன்றரை அங்குலம் வெற்றிடம். அதில் ஏதோ





ஒரு பெண் நாணத்தோடு தன் அழகை மறைக்கும் போதுதான் தன் முழுமையான அழகை வெளிப்படுத்துகிறாள்! —மூர்

எழுத்துக்கள் இருந்து, அழிந்துவிட்டன. என்ன எழுத்துக்களாக இருக்க முடியும்?

நிச்சயம் ஜூலி காலண்டின் ஜே நீங்கலாக உள்ள மீதி எழுத்துக்கள்தான்.

மகிழ்ச்சி மீறி, கண்களில் ஒரு வைரமான ஈரம் பளபளத்தது.

—சம்பகா! என்றான்.

அவளைப் பெயர் சொல்லி அழைத்த முதல் தடவை. அந்த அழைப்பில் பிறந்த உற்சாகமும் ஆனந்தமும் அவளை மெள்ளக் குழைத்தன.

முகம் சிவந்து, கண்கள் நட்சத்திரமிட்டன.

—ஓவ், என்றாள் வெட்கம் பின்னிக்கொண்டு.

—உங்களை வாழ்நாளிலே மறக்க மாட்டேன்....

அவன் இளைப்புடன் நிறுத்த, அவள் இதயத்தில் ஒரு கொத்துப் புறாக்கள் சடசடத்துப் பறந்தன.

....இது பெரிய கண்டுபிடிப்பு, சம்பகா! தலையைப் பிய்த்துக் கொண்டு கத்தலாம் போல இருக்கு....

எழுந்திருந்தான்.

...இந்தாங்க! வச்சுக்குங்க! ரொம்ப ரொம்ப நன்றி....

அந்த உணர்வு வெள்ளத்தில் அவளுக்கும் அவளது தந்தைக்கும் ஒரு குழறல் கும்பிடு போட்டு வெளியே வந்தான்.

தெரு வரை வந்திருக்க மாட்டான்.

அவள் குரல் பின்னால் ஓடிவந்து —ஒரு விஷயம்! என்றது.

திரும்பினான்.

தின்னைத் தூணைக் கொடி சுற்றியது போல் நின்றாள், —நீங்கள் ஒரு நல்ல காரியத்துக்குத்தானே வந்திருக்கீங்க?

—என்னைப் பார்த்தால் தெரியவில்லையா? என்றான் அவன்.

—எனக்கு யாரைப் பார்த்தாலும் நல்லவங்கன்னுதான் தோணும்.

அந்த வார்த்தை சுத்த வெளுப்பாக வந்தது. அவன் முகம் சிறிது குன்றியது. சில விநாடிகள் தயங்கினான்.

—நான் ஒரு நல்லதுக்காகத்தான் வந்திருக்கிறேன்.

—உங்க நல்லதுக்கா? ஊர் நல்லதுக்கா?

அவள் வார்த்தைகளில் என்ன ஆழமான சூடு!

சில நொடிகள் தயங்கினான். —சம்பகா! என்றான். —என் சொந்த நல்லதுக்கும், ஊர் நல்லதுக்கும் வித்தியாசம் தெரியல்லே. அதனாலே....

—நீங்க அன்னிக்கு எதையோ தோண்டினீங்களே! அது போலத் தோண்டிக் கிடைச்சதைச் சுருட்டிக்கிட்டுப் போவீங்களா அல்லது.....

கேள்வி இரும்பு போல விழுந்தது.

அவள் துணிச்சலுக்கு உள்ளூற மெச்சினான்.

—அதைப் போல இல்லே! என்னுடைய காரியமே வேறே!

—என்ன காரியம்? சொல்லுங்கோ! வம்சாவளி இல்லேன்னு எனக்கு அப்பவே தெரிஞ்சு போச்சு.

திடுக்கிட்டான் அவன். —சம்பகா, என்று சொல்லி, விசேஷ அக்கறையுடன் பக்கத்தில் வந்தான். மனத்துக்குள் ஒரு உணர்ச்சி மயமான மல்லிக் உடனே எல்லாவற்றையும் அவளிடம் சொல் என்று கட்டளை இட்டான். —சொல்லுவேன்! உங்க மனசுக்குள்ளேயே வச்சுப்பீங்களா? என்றான்.

—ஓவ், என்றாள்.

—சுவாமி சத்தியமா?

—சத்தியமா!

—சொப்பனத்திலே கூடச் சொல்லக் கூடாது.

—எனக்குச் சொப்பனமே வராது.

சிரித்தான்.

—நான் ஒரு கப்பலைத் தேடி வந்திருக்கிறேன்.

அவள் விழித்தாள்.

—இங்கே ஏது கப்பல்?

—நூறு வருஷங்களுக்கு முன்னாடி வந்தது.

—அடே அம்மாடி! இங்கே எதுக்கு வந்தது?

—தெரியலே! இந்தப் பக்கம் வந்திருந்ததாலேதான் இந்த பாட்ஜ் இங்கே கிடைச்சிருக்கு.

—பாட்ஜ்லே என்ன இருக்கு?

—எச். எம். எஸ். ஜே.ன்னு இருக்கு நான் தேடற கப்பல் அந்த இனிஷியலோடதான் இருந்தது. அதனாலேதான் இந்தக் கரைப் பக்கம் வந்து அது மூழ்கியிருக்கணும்னு என் நம்பிக்கை. அதிலேயிருந்து தப்பிச்சு வந்தவங்கதான் இந்தக் கரையிலே வந்து செத்துப் போயிருக்கணும். அவங்களோட எலும்புக் கூடுங்கதான் இங்கே இப்போ கிடைச்சிருக்கு.

ஸ்தம்பித்து நின்றாள் அவள்.

—சார்! அந்தக் கப்பல் இங்கே வந்திருக்குன்னு தெரிஞ்சா உங்களுக்கு என்ன லாபம்?

அவன் தயங்கினான். —அந்த ஒரு கேள்வி மட்டும் கேட்டுடாதீங்க. நான் உடனே நிஜம் சொல்லிட முடியாது. பின்னாலே

---

"நேற்று டி. வி. யிலே திருட்டு எப்படி எல்லாம் நடக்கிறதுன்னு ரொம்ப சுவாரஸ்யமா நாடகம் போட்டுக் காண்பிச்சாங்க!... பிரமாதமா இருந்தது...!"

"அதுக்கு ஏன் இப்படி வருத்தமா இருக்கே?"

"அந்த நாடகத்தை சுவாரஸ்யமா பார்த்துக்கிட்டு இருக்கிறப்போ தோட்டபக்கமா எவனோ நுழைஞ்சு பாத்திரங்களைத் திருடிக்கிட்டுப் போயிட்டான். கவனிக்காமல் இருந்துட்டேன்!"

—ரயவி ரங்கநாதன்



## நன்றி அறிவிப்பு

எனது மகன் சுரேஸ் ஆறுவது ஸ்டாண்டர்டு தேர்வில் 2 முறை வெற்றி பெறவில்லை. மதிப்பிற்குரிய ரெவரண்ட் ஃபாதர் என்னை நேரில் கூப்பிட்டு இம்முறை உமது மகன் தேர்வில் வெற்றி பெறவில்லையாயின் பள்ளியிலிருந்து நீக்கி விடுவோம் என கூறி, "ANAC MEMORY HOMOEO PILLS"ஐ ஹோமியோ கிளினிக் & ரிசர்ச் சென்டர், 5, சீதா நகர் முதல் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-34 என்ற விலாசத்திலிருந்து 120 மாத்திரைகள் கொண்ட புட்டியை நேரில் ரூ. 4-50 கொடுத்தோ அல்லது மணி ஆர்டரில் ரூ. 5-50 அனுப்பியோ பெற்றுக் கொள்ளும்படி சொன்னார். என் மகன் ஒரு மாத காலம் அந்த மாத்திரையை சாப்பிட்டான், அதிலிருந்து கணக்கில் நல்ல மார்க் வாங்க ஆரம்பித்தான். பத்தாம் வகுப்பில் எல்லா பாடங்களிலும் உயர்ந்த மார்க் வாங்கி முதல் வகுப்பில் தேர்வில் வெற்றி பெற்று தற்சமயம் பதினொன்றும் வகுப்பில் படித்து வருகிறான். இதனை இறைவன் அளித்த வரப் பிரசாதம் என நினைத்து திருப்பதி ஏழுமலையானை சென்று வணங்கி வந்தோம். ரெவரண்ட் ஃபாதருக்கும் எங்கள் குடும்பத்தின் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

**(Sd.) எஸ். ரெங்கசாமி,**

**கேசவ பெருமாள் சன்னதி தெரு.**

**மயிலை, சென்னை-600 004**



மகாமகம் நாள்:
மார்ச் 1, 1980

# இம்முறை உங்கள் கும்பகோணம் விஜயம் நெடுநாள் நினைவிலிருக்கட்டும்

பல கோவில்களில் சேவித்து, புண்ணிய நீராடிய மனநிறைவுடன் வீடுதிரும்புமுன்பு, நினைவாக

# காளி
## பிராண்ட்

**எவர்சில்வர்/**
**செம்பு-அடிப்பாகமுடைய எவர்சில்வர் பாத்திரங்களை வாங்கிச் செல்லுங்கள்.**



கிடைக்குமிடம்:

**ஸ்ரீ எம்.வி.எம். ஸ்டோர்ஸ்**
("காளி பிராண்டு" துணை நிறுவனம்)
கும்பேசுவரர் சன்னதி,
கும்பகோணம்-1

Grant. KB. 7 Tam

முடிஞ்சாச் சொல்றேன். இப்போ எனக்குத் தெரிய வேண்டியது அந்தக் கப்பல் இங்கே வந்திருக்கு என்கிற சேதிதான். இனிமே நான் வேறே வழிகளைப் பார்த்துக் கொள்ளுவேன்.

அவன் நாலு அடி தாண்டியிருக்க மாட்டான். சின்னக் கை தட்டிக் கூப்பிட்டாள் அவள்.

அவன் திரும்பி வந்தான்.

—நீங்க பணக்காரங்களா? என்றான்.

—அப்படி ஒண்ணுமில்லே! பணக்காரனைப் பார்த்துக்கிட்டிருக்கிறேன். ஏன்? பணக்காரன்னு என்ன கேட்பீங்க?

—பணம்தான் கேட்பேன். நான் உதவி செய்தேன்னு அதுக்குக் கூட கூலி கேட்கும்படி ஆகிவிட்டது காலம். அப்படி இருந்தாத்தான் பிழைக்கமுடியும். கிராமத்திலேயிருந்துகிடைக்கிற ஈகை, இரக்கம், தர்மத்துக்கு எல்லாம் கூட நாங்க கூலி கேட்க வேண்டிய நிலைமை ஆயிட்டது. இல்லாட்டி பட்டிணத்துக்காரங்க எங்களை ஏமாத்திடறாங்க.

கரிக் கூர்உடன் வார்த்தைகள் வந்தன. அவன் அடிவாரத்தையே அது கலக்கு வது போல.

—சம்பகா! நீங்க கூலி கூடக் கேட்பீங்களா!

—என்ன ஆச்சரியம்? நான் மூணு ஜீவன்களைக் காப்பாற்ற வேண்டியிருக்கு!

—மூணு ஜீவனா?

—ஆமாம், எங்க அப்பா, நாகலாபுரிசுவரர் அவர் மனைவி, மூன்று பேரையுந்தான்.

மீனவும் உணர்வில் திமர் ஆர்ப்பரிப்புகள்: சின்னச் சின்ன நுண் உணர்ச்சிகள் அவள் எளிய வார்த்தைகளில் எப்படித் தெறிக்கின்றன? இவள் உண்மையில் பெரியவள்தான் என்று நினைத்தான்.

இவளிடம் எல்லாவற்றையும் சொல்லி விடலாம் என்றுஅருகில் வரும் நேரத்தில்,

—டேடே, அதே ஆள் வந்திருக்கான், போலீசைக் கூப்பிடு

என்ற வார்த்தை கன்னென்று விழ, எதிரே சந்தனக் கீற்று சரபேந்திரன் உத்தியோக தோரணையில் பிரமாத வில்லெனட்டுடன் நின்றார்.

அதே சமயம்,

நாகப்பட்டினத்துக்குக் கிழக்கே நெப்டியூன் தாலாட, அதில் டில்லான் ஒய்ட் மேல் தளத்தில் நின்று கொண்டு, நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

இரண்டு நீர்மூழ்கி நிபுணர்கள் தண்ணீரில் மூழ்குவதற்குத் தயாராக இருந்தார்கள்.

வொய்ட் தமது கையில் பெரிய வரைபடத்துடன், தம் சகாவான டார்வினிடம் பேசிக் கொண்டிருந்தார்.

—இந்த இடத்தில்தான் ஜூலி காவண்ட் இருக்க வேண்டும் என்றார்.

அடுத்த சில நிமிடங்களில் அந்த நீர்மூழ்கி நிபுணர்கள் தண்ணீரில் குதித்து மறைந்தார்கள். (தொடரும்)

---

## வெற்றிகரமான இல்லத்தரசி – பதினைந்து அம்சத் திட்டம்!

1. எப்பொழுதும் சுறு சுறுப்பாகவும் சிரித்த முகத்துடனும் இருங்கள் (லூசாகச் சிரிக்கக் கூடாது)
2. வீட்டுக்கு வருபவர்களை வாய்நிறைய மகிழ்ச்சியோடு ‘வா’ எனக் கூப்பிடுங்கள்.
3. வீட்டைச் சுற்றியுள்ளவர்களை நன்கு தெரிந்துக கொண்டு நட்புறவுடன் இருங்கள்.
4. எந்த விஷயத்தையும் தருணமறிந்து பேசுங்கள். (உதாரணம் கணவர் அவசர அவசரமாகக் காரியாலயம் புறப்படும்போது எலக்ட்ரிக் பில் வந்தது பார்த்தீர்களா எனக் கேட்காதீர்கள்)
5. திருமணமாகி எத்தனை ஆண்டுகள் சென்றிருந்தாலும் சரி, கணவர் வீட்டாரைப் பற்றிய உங்கள் அபிப்ராயங்களைச் சட்டென்று சொல்லி விடாதீர்கள்.
6. எப்பொழுதும் இளமையாகத் தோற்றமளியுங்கள். (எனக்கெதற்கு இன்னும் அலங்காரம் எனச் சொல்லி விடாதீர்கள். ஆனால் ஒன்று, உங்கள் அலங்காரம் வேஷம் போட்டாற் போல் இருக்கக் கூடாது)
7. கணவரின் முன், உடல் நலம் சீராக இல்லை என அடிக்கடி புகார் செய்து படுத்து விடாதீர்கள். அதற்காக உண்மையாகவே உடம்பு சரியில்லை] என்றாலும் மறைக்காதீர்கள். சதா தூங்குவது மற்றொரு மைனஸ் பாயின்டு.
8. மற்ற ஆண்களைக் கணவர் எதிரிலேயே உணர்ச்சி வசப்பட்டுப் புகழ்ந்து விடாதீர்கள்!
9. சமயம் கிட்டும்போது, அவர் காதில் விழுவது போல் லேசாக மற்றவர்களிடம் அவரைப்பற்றி புகழ்ந்து பேசுங்கள். (என்ன செய்வது? மணந்து கொண்டு விட்டீர்களே! புகழத்தான் வேண்டும்!)
10. கணவர் ரொம்பக் கோபமாக ஏதாவது பேசினால், காதில் போட்டுக்கொள்ளாமல் எதிர் வாதம் செய்யாமல் மௌனமாக இருந்து விடுங்கள்.
11. கணவருடைய அபிப்பிராயம் ஒத்து வரவில்லை யென்றால், தருணம் பார்த்து நாசுக்காக தனிமையில் அதைச் சொல்லுங்கள்.
12. பலர் முன்னிலையில் கணவரின் குற்றங்களை, குறைகளை எடுத்துக் காட்டாதீர்கள்.
13. உண்மையில், உங்கள் கணவர் நீங்கள் சொல்வதுபோல் கேட்க வேண்டும் என நீங்கள் விரும்பினால், பிறர் முன்னிலையில் அவருக்கு அதிக மதிப்பு தாருங்கள்.
14. கணவர் போட்ட பட்ஜெட்டுக்கு நான்கைந்து ரூபாய் குறைவாகவே உங்கள் உடையைத் தேர்ந்தெடுங்கள். ‘எதற்காக அவ்வளவு ரூபாயைக் கொட்டுவது என்று சற்று குறைவாகவே வாங்கி விட்டேன்’ என கம்பீரமாக ஒரு போடு போடுங்கள் (சும்மா இருந்து விட்டால் மார்க் போய்விடும்!)
15. எல்லாவற்றுக்கும் மேலாக, வாய்க்கு ருசியாக நன்றாக சமைக்கத் தெரிந்து கொள்ளுங்கள். அவருடன் சேர்ந்து உட்கார்ந்து ஒருவருக்கொருவர் எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடலாம். ஆனால் அவருக்கு உணவு பரிமாறும் வேலையை இன்னொருவரிடம் மறந்தும் கொடுத்து விட்டு வேறு வேலையில் கவனமாயிராதீர்கள்! அது என்ன தலைபோகிற அவசரக் காரியமாயினும் சரி!





**திருமண நன்றி அறிவிப்பு**

என் மகன், V. K. ஜெயகுமார், B.Sc, DSRSE-க்கும், (சென்னை ஏ. ஜி. ஆபிஸ், அக்கவுண்ட்ஸ் ஆபிஸர், திரு. சௌரி ராஜுலு நாயுடு அவர்களின் மகள்) **ரேவதி**, B.A.-க்கும் சென்னை ஸ்ரீ ராம கல்யாண மண்டபத்தில் 24–1–1980ல் நடந்த திருமணத்திற்கு நேரில் வருகை தந்து வாழ்த்துக்கள், பரிசுகள் அளித்த நண்பர்கள், சுற்றத்தார், அதிகாரிகள், வியாபார அன்பர்கள், வெளிநாட்டிலுள்ள நண்பர்கள் அனைவருக்கும் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**V. M. K. சுவாமி, சுவாமி ரேடியோ ஹவுஸ், வேலூர்-632004**

# பொழுது போக்கு

**யோகாசனம் (குமாரி நீபா ராமஸ்வாமி)**

''உடலை அழகாக வைத்துக் கொள்வதற்கு மிகவும் ஏற்றது தினசரி யோகாசனம் செய்வதுதான். நான் கிழக்கு அபிராமபுரத்தில் உள்ள யோகாலயம் இயக்குனர் திரு யோகா சுப்பிரமணியத்திடம் டயில்கிறேன். அழகுக்கு மட்டுமின்றி ஆரோக்கியம் பேணவும் ஆசனங்கள் உதவுகின்றன.''





**போன்சாய் (திருமதி மல்லிகா சாகர்)**

''பல பெரிய பெரிய மரங்களைச் சிறிய தொட்டிகளில் சின்னதாகச் செய்து வளர்ப்பதுதான் போன்சாய் என்னும் ஜப்பானிய முறை. நான் போன்சாய் முறையை நன்றாகப் பயின்று ஒரு கண்காட்சி அளவுக்கு கிட்டத்தட்ட முப்பது வகைகள் வைத்திருக்கிறேன். ஆல், அரசு, வேப்ப மரங்கள் பவழமல்லி, செம்பருத்தி, விருக்ஷி, தக்காளி, மிளகாய், போகன்வில்லா போன்ற பல வகைகள். செடிகள்தான் சிறியவையே யொழிய பழங்களும், மலர்களும் சாதாரண அளவில்தான் இருக்கின்றன.''

**டெலிவிஷன் நிகழ்ச்சி தொகுப்பாளர் (திருமதி பிரேம் ஜோதி)**

டாக்டர் ராஜலிங்கத்தின் துணைவியான பிரேம் ஜோதிக்குச் சிறு வயது முதல் ரேடியோவில் குழந்தைகள் நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக்கொள்வதில் தனி ஈடுபாடு. நடிப்புத் திறனில் மிகவும் பிரபலமான பிரேம் ஜோதிக்கு டெலிவிஷனில் குழந்தைகள் நிகழ்ச்சி செய்வதிலும் ரொம்ப ஆர்வம். ''சமயோஜித புத்தியுடன் குழந்தைகள் மனநிலையையும் நாம் கொண்டிருந்தால்தான் குழந்தைகள் நிகழ்ச்சிகளை வெற்றிகரமாகச் செய்யலாம்'' எனக் கூறுகிறார் பிரேம் ஜோதி.



### கவிதைகள் எழுதல்
### (குமாரி சரஸ்வதி 'மதி ஒளி')

ஆங்கிலம், ஹிந்தி, தமிழ் ஆகிய மொழிகளை நன்கு அறிந்த குமாரி சரஸ்வதி 'மதி ஒளி' என்ற பெயரில் பெரியவர்களுக்கும் குழந்தைகளுக்கும், நிரம்பக் கவிதைகள் எழுதி வருகிறார். பல புத்தகங்களை இவர் மொழிபெயர்த்துமிருக்கிறார்.





### ரோஜா வளர்ப்பு
### (திருமதி கமலா சுப்பிரமணியம்)

திருமதி கமலா சுப்பிரமணியம் கிட்டத்தட்ட நூறு வகை ரோஜாக்கள் வைத்திருக்கிறார்! இவரே இரண்டு வகைச் செடிகளைச் சேர்த்துப் புது வகை செய்கிறார்! ''ரோஜாவுக்கு செம்மண், மணல்சலவை, ஏற்றது. எருமாட்டுச்சாணம், காய்ந்த இலை ஆகியவை. குதிரை, ஆட்டு சாணம் மிக உஷ்ணம். ரோஜாச் செடி தாங்காது. நல்ல வெய்யில் இருக்கும் இடத்தில்தான் ரோஜா வைக்க வேண்டும். 'ரோஸ்மிக்ஸ்' ரசாயன உரம் வாரா வாரம் போட வேண்டும். பூச்சி அரித்த இலைகளை அங்கேயே பறித்துப் போடக் கூடாது. அவைகளைத் தூர எறிந்து விட வேண்டும்'' என்கிறார். பனிக் காலத்திலும் மழைக் காலத்திலும் இலைகளை வெட்டி விட வேண்டுமாம்.



### மாடலிங் (குமாரி மது தர்ஷினி)

பி. ஏ. இறுதி ஆண்டு படித்து வரும் பஞ்சாபி மாணவியான குமாரி மது தர்ஷினியின் பொழுதுபோக்கு மாடலிங். கோ-ஆப்டெக்ஸ், லெதர் காட்சி, ராசி சில்க், பாம்பே டையிங் பொருள்களுக்கு மாடலிங் செய்து பரிசுகளும் பெற்றவர். ''மாடலிங் கலையைச் சென்னையில் பொழுது போக்காகத்தான் வைத்துக் கொள்ளலாம்; தொழிலாக ஏற்றுக்கொள்ள ஏற்ற சூழ்நிலை இல்லை'' என்கிறார் இந்த அழகி.



### நாடகம் (சாதனை ஸ்டேஜ்)

சீனிவாச காந்தி நிலையத்தில் ஒரு நாள் அம்புஜம்மாள் ''ஏன் பெண்களாகச் சேர்ந்து நாடகம் போடக் கூடாது? நல்ல காரியங்களுக்கு நாமே நாடகம் போட்டு நிதி திரட்டலாமே?'' என்று சொன்னதும் திருமதி ராஜலட்சுமி சந்தானமும் திருமதி சுசீலா பத்மநாபனும் இணைந்து ஒரு பெண்கள் நாடகக் குழுவை அமைத்து விட்டனர். திருமதிகள் ஜெயா சீதாராமன், தங்கம் கோபாலன், சுமதி ராமன் உடன் இணைந்தவர். பெண்கள் நாடகக் குழு என்பது இது ஒன்றுதான். பல இடங்களில் இது வரை 65 முறை நாடகங்களை நடத்தியுள்ளனர்.



### மெல்லிசை (குமாரி ராகினி ராகவன்)

பி. காம் பட்டதாரியான குமாரி ராகினி ராகவனுக்குப் பொழுது போக்கு மெல்லிசை தான். சிவராஜ் — ஆனந்த் குழுவில் பாடும் இவர் சுமார் ஆறு ஏழு வருடங்களாகப் பாடி வருகிறார். எந்தப் புதுப் பாட்டையும் அப்படியே திருப்பிப் பாடும் திறன் உண்டு. இரண்டு ஆண்டுகள் முறைப்படி கர்நாடக சங்கீதம் படித்த குமாரி ராகினி, தமிழ், ஹிந்தி, தெலுங்கு, கன்னடம், மலையாள மொழிகளில் பாடுவார்.

### விளையாட்டு வீராங்கனை (குமாரி கே. ஆர். மீரா)

சத்துணவு ஆராய்ச்சியை முக்கிய பாடமாக எடுத்துப் பெண்கள் கிறிஸ்துவ கல்லூரியில் முதலாண்டு எம். எஸ்ஸி படிக்கும் குமாரி கே. ஆர். மீராவுக்கு பொழுது போக்கு கூடைப் பந்து விளையாட்டு தான். இதுவரை 50க்கும் மேற்பட்ட பந்தய ஆட்டங்களில் பங்கு கொண்டு பல வெற்றிகளைத் தமது கட்சிக்குத் தேடித் தந்தவர். இந்தியாவில் பல பகுதிகளில் ஆடி தம் பெருமையை நிலை நாட்டியுள்ள குமாரி கே. ஆர். மீரா சென்னை மாநில பெண்கள் கூடைப் பந்து அணியின் காப்டன்.





**கராத்தே (குமாரி பாரதி)**

கல்லூரி மாணவியான குமாரி பாரதி இந்திரா நகர் மாதர் சங்கத்தின் அங்கமாக நடைபெறும் கராத்தே அசோசியேஷனில் திரு டோனி பொன்னையாவிடம் கராத்தே பயில்கிறார். பெண்கள் இன்றைய சூழ்நிலையில் தற்காப்புக்காக இதனைப் பயில வேண்டும் எனக் கூறும் இவர் பர்ப்பிள் பட்டை பெற்றவர். ''ஆண்கள் தாக்கினால் திருப்பித் தாக்க: பெண்களுக்கென்றே சில கராத்தே முறைகள் உள்ளன. இவற்றை ஆண்களுக்குக் கற்றுத் தர மாட்டார்கள்'' என்கிறார் குமாரி பாரதி.

**நாட்டியம் (குமாரி சாவித்திரி காங்கர்)**

மூன்று தலைமுறையாகத் தென் ஆப்பிரிக்காவில் வாழும் குடும்பத்தில் தோன்றியவர் குமாரி சாவித்திரி காங்கர். ஆங்கில, ஸ்பானிஷ் நாட்டியங்கள் நன்கு பயின்றவர். பரத நாட்டியம் பயில ஆர்வம் கொண்டு இதற்காகவே சென்னை வந்து திருமதி இந்திரா ராஜனிடம் பயின்று அரங்கேற்றம் செய்து விட்டார்.



# பருவங்கள் மாறும்....!



எம்.ஏ.சுசீலா

பிற்பகல் வேளைகளில், பிடித்துத் தள்ளினாலும் நகர மறுக்கிற பொழுதுகள்... காலை, மாலை நேரங்களிலே மட்டும் இறக்கை கட்டிக் கொண்டு பறக்கிற அதிசயத்தை நினைத்தவளாய், மனத்துக்குள் சிரித்துக் கொள்கிறாள் ராஜி. ஆயிற்று. மணி நான்கடித்தால் யூ. கே. ஜி. வகுப்பில் படிக்கும் கிரி வந்துவிடுவான். வரும்போதே அவன் முகம் பார்த்து, 'மூட்' பார்த்துப் பாலும், சோறும் 'நினைந்தூட்டி' முடிப்பதற்குள் கொண்டு வந்து கொட்டக் கொள்ளைச் செய்திகளோடு வாசற்படி ஏறும்போதே மூச்சு வாங்க வாங்கப் பேசத் தொடங்கி விடுவாள் மூத்த பெண் உஷா. தினந்தோறும் அலுக்காமல் பேச இவளுக்கு எப்படித்தான் இவ்வளவு விஷயங்கள் கிடைக்கிறதோ என்று சலித்துக் கொண்டாலும் அவள் வடிவில் தன் 'மினியேச்சரை'யே கண்டவளாய் உணர்வு பூர்வமாய்த் தன் பிரதிபிம்பத்துடன் ஒன்றிக் கலந்து போவாள் ராஜி.

இன்றென்னவோ சத்தமில்லாமல் உள்ளே நுழைகிறாள் உஷா. 'ஷூ'வையும் 'சாக்'ஸையும், புத்தக மூட்டைகளையும் மூலைக்கொன்றாய் வீசி எறிந்தவள், அமைதியாய் உடை மாற்றிக் கொண்டு வந்து, அம்மா கலந்து கொடுத்த 'போர்ன்விட்டா'வுடன் ஒரு மூலையில் போய் முடங்கிக் கொள்கிறாள். இதுவரை கலகலப்பை மட்டுமே உஷாவிடம் கண்டு வந்திருக்கும் ராஜியின் தாயுள்ளத்துக்கு அந்த மௌனம் சங்கடத்தை விளைவிக்க, அருகே சென்று மகளின் தலையை ஆதரவாய்க் கோதி விடுகிறாள். கலங்கிச் சிவந்து போயிருக்கிற அந்தக் கண்கள்... எந்த நேரத்திலும் மடை உடைக்கத் தயாராய் அவளைப் பயமுறுத்துகின்றன.

''என்னம்மா? ஸ்கூலிலே என்ன நடந்தது? டீச்சர் ஏதாவது சொன்னாங்களா?''

''......''

'' 'ரேங்க்' குறைஞ்சு போச்சா?''

கோழிக் குஞ்சாய்த் தன் மடியில் முகம் புதைத்துக் கேவும் உஷாவின் குமுறல்கள் தானாக மட்டுப்படும்வரை பொறுமையாய்க் காத்திருக்கிறாள் ராஜி.

''இல்லேம்மா!... வந்து.... என் ஃப்ரெண்ட் கீதா இல்லே, அவ அப்பாவுக்கு பெங்களூருக்கு டிரான்ஸ்ஃபர் ஆகியிருக்காம். இன்னிக்கு அவங்கம்மா டி. சி. வாங்க ஸ்கூலுக்கு வந்தாங்க!.... கீதா இல்லாமே... நான் எப்படி அந்த ஸ்கூலுக்கு....''

விக்கி விக்கி வார்த்தைகளைச் சிந்தியவள் மேலே முடிக்க முடியாமல் திணறித் திண்டாடிப் போகிறாள்.

''அதுக்கென்ன பண்றது உஷாக் கண்ணு? கீதா மாத்திப் போயிட்டான்னு நீயும் அவளோடேயே போயிட முடியுமா? வேறே எத்தனையோ ஃப்ரெண்ட்ஸ் இருக்காங்க இல்லே!.... ஒருத்தர் இல்லேங்கறதுக்காக ஸ்கூலுக்கே போகாமல் இருந்திட முடியுமா? அவ அட்ரஸை வாங்கி வைச்சுக்கோ அடிக்கடி லெட்டர் போடு! 'வெகேஷன்'லே ஒரு தரம் அவ கூட போய் இருந்திட்டு வா!''

அமைதியாக வரும் அம்மாவின் உபதேச மொழிகளைக் கேட்குமளவு பொறுமை இளமை ததும்பும் அந்த நெஞ்சுக்கு இருந்தால்தானே!

''போம்மா! நானும் கீதாவும் எப்படிப் பழகினோம்னு உனக்கு எப்படித் தெரியும்? எங்க டீச்சர் எல்லோருமே கூட எங்களை 'ட்வின்ஸ்' அப்படின்னு கேலி பண்ணற அளவுக்கு.... ஓ காட்! கீதா இல்லாமே 'ஸ்கூல் லைஃபை' என்னாலே கற்பனை கூடப் பண்ண முடியலேயேம்மா?''

புலம்பித் தவிக்கும் மகளைத் தேற்ற வழி தேடும் ராஜியின் நெஞ்சில் உஷாவின் சொற்கள் எங்கோ நெருட.... நினைவின் ஆழத்தில் அவற்றைத் துழாவிப் பார்த்து அதிலேயே அழுந்திப் போகிறது அவள் சிந்தனை ஓட்டம்!

• • •

''சிஸ்டர்! சின்னாளப்பட்டியிலிருந்து வந்திருக்கிற அந்த ஸ்டூடண்டோட பெரிய தொல்லையாப் போச்சு! 'ஹாஸ்டலு'க்கு வந்து சேர்ந்ததிலேயிருந்து சரியாச் சாப்பிடறதில்லே, தூங்கறதில்லே.... எப்பப் பார்த்தாலும் அழுதுக்கிட்டு!''

கட்டுப்பாடுகள் நிறைந்த அந்தப் பெண்கள் கல்லூரி விடுதியின் வார்டன் சிஸ்டர், கல்லூரி முதல்வரிடம் புகார் செய்கிறார்.

''யாரு? அந்த ராஜிதானே?.... லீவ் ஹர் டு மீ சிஸ்டர்! ஐ வில் டீல் வித் ஹர்.''

---



அழகிய பெண் வாதாடும்போது எல்லாப் பேச்சாளர்களும் ஊமையாகி விடுகிறார்கள்.

—ஷேக்ஸ்பியர்

கர்த்தரிடம் தன் சுமையை இறக்கிவைத்து விட்ட நிம்மதியில் சலனம் நீங்கப் பெற்ற கனிவு ததும்பும் கண்கள், பரிவும் பாசமும் நிறைந்த சொற்கள்... அவற்றோடு முதல்வர் ஸிஸ்டர் மரியா ராஜியைத் தேடி வந்து பேசுகிறார்.

''வாட் மை டியர் சைல்ட்? வாட் ஈஸ் யுவர் ப்ராப்ளம்?''

''ஸிஸ்டர்! எங்க அம்மாவை விட்டுட்டு என்னால ஒரு நிமிஷம் கூட இங்கே இருக்க முடியாது ஸிஸ்டர்!.... ஐ ஃபீல் வெரி லோன்லி! இப்பவே அவங்களை வரச்சொல்லி எழுதிடறேன். என்னை ஊருக்கு அனுப்பி வச்சிடுங்க ஸிஸ்டர்'' — தேம்புகிறாள் ராஜி.

''லுக் ராஜி! இங்கே... இந்த 'ஹாஸ்டல்' லிலே எத்தனை பெண்கள் இருக்காங்க பார்த்தியா? எல்லோரும் உன்னை மாதிரியா அழுதுக்கிட்டிருக்காங்க? அப்படின்னா மேலே படிக்க யாருமே வர முடியாதே! நீ என்ன இன்னும் சின்னக் குழந்தையா? அம்மாவை விட்டுப் பிரிய முடியாதுங்கறதுக்கு! இந்த பாரு! என்னை உங்க அம்மாவா நினைச்சுக்கோ! எப்ப எப்பப் பேசணும்னு தோணுதோ அப்ப வந்து பேசு! என்ன தெரியுதா?''

அப்போதைக்கு ராஜி தலையசைத்தாலும் அவள் ஏக்கமும் பயமும் இம்மிகூடக் குறையாததை ஸிஸ்டர் உணர்கிறார். செல்வக் குடும்பத்தில் தனியொரு பெண்ணாய்ப் பிறந்து, பெற்றோரின் அரவணைப்பிலிருந்து முதன் முதலாகப் பிரிந்து வந்திருக்கும் ராஜியின் 'ஹோம் ஸிக்னஸ்' ஸிஸ்டருக்கு நன்றாகவே புரிகிறது. இது மாதிரி எத்தனையோ ராஜிகளைத் தம் அனுபவத்தில் பார்த்தவரல்லவா அவர்! ''டைம் இஸ் பெஸ்ட் ஹீலர்'' என்று சொல்லியபடி திரும்பிப் போகிறார்.

• • •

வீட்டைத் தவிர வெளியே போய் எவரோடும் பேசியோ பழகியோ அறியாத கட்டுப்பெட்டி மனப்பான்மை நிறைந்த கிராமச் சூழலிலே நேற்றுவரை வளர்ந்துவிட்டு இப்பொழுது திடீரென்று நகர நாகரிகத்தின் பட்டாம்பூச்சித்தனங்களோடு சமரசம் செய்து கொள்ள முடியாததால் ஏற்பட்டு விட்ட இடைவெளி, நுனி நாக்கு ஆங்கிலங்களோடு





அவதூறு நல்ல பெண்ணின் வீட்டு வாசலில் பலமிழந்து மாய்ந்து விடுகிறது.

-டென்மார்க் பழமொழி

சரிக்குச் சரி பேச முடியாததால் பிறந்து விட்ட தாழ்வு மனப்பான்மை, பழகியவர்களைப் பிரிந்த வருத்தம், திக்குத் தெரியாத காட்டில் வழி தெரியாமல் தன்னந் தனியே சிக்கிக் கொண்டதைப் போன்ற திகைப்புணர்ச்சி..... எல்லாமாய் நெஞ்சை முட்டிக் கொண்டு துக்கம் பீறிட்டு வர, குத்துக் காலிட்டு உட்கார்ந்தபடி முழங்கால்களுக்கிடையே தலையை அழுத்திக் கொண்டு கண்ணீரை மாலையாய்ச் சொரிந்து கொண்டிருக்கிறாள் ராஜி.

'ராகிங்' செய்யும் சீனியர் மாணவியரின் கூட்டம் ஒன்று அவளைச் சூழ்ந்து கொள்கிறது. பொதுவாக 'ராக்' செய்வதைக் கல்லூரி முதல்வர் அனுமதிப்பதில்லை என்றாலும் கண்டும் காணாமலும் சில இறுதி ஆண்டு மாணவியர் கிண்டலும், கேலியுமாய்ப் புது மாணவியரைச் சீண்டி வேடிக்கை பார்க்கிறார்கள்.

''புதுப்பசு பாருப்பா! அதுதான் மிரளுது!''

''ஆல் ரைட் ராஜி! இஃப் யூ கோவாபரேட் வித் அஸ் வி வில் லீவ் யூ இன் எ ஃபியூ மினிட்ஸ்! யூ ஹேவ் டு என்டர்டெய்ன் அஸ் பை கிவிங் எ டாக் இன் இங்கிலீஷ்.''

''டாப்பிக் என்ன தெரியுமா? 'சீனியர்ஸ்!' ''

கையும் காலும் பயத்தில் வெட வெடக்கத் தனக்குத் தெரிந்த அரை குறை ஆங்கிலத்திலே ஆரம்பிக்கிறாள் ராஜி. ஒவ்வொரு வார்த்தைக்கும் வரிக்கும் அவளை மடக்கி நிறுத்திக் கலாட்டா செய்து களிக்கிறார்கள் அவர்கள். அந்தக் கூட்டத்துக்கிடையே புயலாக நுழைகிறாள் ப்ரியா. ராஜியைப் போல அவளும் முதலாண்டு மாணவிதான். என்றாலும் நகரச் சூழலிலே பிறந்து வளர்ந்த காரணத்தால் தன்னம்பிக்கையுடன் பேசுகிறாள்.

''மை டியர் ஃப்ரண்ட்ஸ்! தனியா ஒருத்தி இப்படி அப்பாவியா மாட்டிக்கிட்டா அவளை இப்படிக் கிண்டல் செய்து அவமானப்படுத்தறது நாகரிகமில்லே. ராஜி ரூரல் சைட்லேயிருந்து வந்திருக்கிறதாலே அவளுக்கு இங்கிலீஷிலே 'ஃப்ளுயன்ஸி' இல்லாமே இருக்கலாம். ஆனா நகர நாகரிகத்திலே மூழ்கித் திளைக்கிற நமக்குள்ளே எத்தனை பேராலே ஆங்கிலம் கலக்காமே சுத்தத் தமிழிலே அஞ்சு நிமிஷமாவது தொடர்ச்சியாப் பேச முடியும் சொல்லுங்க! அப்படிப் பேச யாராவது முன்வந்தா ராஜியையும் பேச வையுங்க! எனக்கு ஆட்சேபணையில்லே!''

கூட்டம் வாயைத் திறக்காமல் மௌனமாகக் கலைகிறது.

தன்னைக் காக்க ரட்சகியாய் வந்த ப்ரியாவை நன்றியுணர்வு பொங்கும் கண்களால் ஏறிட்டுப் பார்க்கிறாள் ராஜி. அவள் கண்ணீரை மெதுவாக ப்ரியா துடைத்து விடுகிறாள்.

''வா சாப்பிடப் போகலாம்!''

ராஜியின் உள்ளங்கையில் தன் கரத்தை வைத்து அழுந்தப் பற்றி ஆதரவை அவள் பன்னீராய்த் தெளிக்கிற அந்த வேளையில் ராஜியின் மனப் பாரங்களின் சுமை தாங்கியாய், நண்பனாய், மந்திரியாய், நல்லதோர் ஆசானாய் உருவெடுக்கிறாள் ப்ரியா. பெற்றோரின் பாசத்தை மட்டுமே இதுவரை அனுபவித்துக் கண்டிருந்த அந்த நெஞ்சு இன்று புதிதாய்க் கிட்டிய நட்புச் சூட்டில் இதமாய்க் குளிர் காய்கிறது.

● ● ●

''என்ன ராஜிப் பாப்பா! அம்மாவைப் பார்க்க ஊருக்குக் கிளம்பியாச்சா? ஆமா முகத்திலே என்ன சந்தோஷத்தையே காணோம்!.... ஓ! இப்பச் சிநேகிதர்களைப் பிரியணுமேன்னு கவலையா? காலாண்டு விடுமுறைக்கு ஊருக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் ராஜியை 'மெஸ்'ஸிலுள்ள ஆயா கிண்டல் செய்கிறாள்.

ஆயாவின் வார்த்தைகளை அவசரமாக மறுத்தாலும் அவள் சொல்லிலுள்ள உண்மையை ராஜியின் நெஞ்சு எண்ணிப் பார்க்கிறது. ப்ரியாவைப் பிரிந்து பத்து நாட்கள் ஓ....தோ!

வீட்டுக்கு வந்து சேர்ந்ததிலிருந்து ஒரு நாளைக்கு ஏழெட்டு முறையாவது ப்ரியா புராணம் பாடவே அவளுக்கு நேரம் சரியாக இருக்கிறது. பத்து நாட்களில் குறைந்த பட்சம் பத்துக் கடிதமாவது எழுதித் தீர்க்கிறாள்.

''ஏண்டி! அப்படி நிதம் கடிதம் எழுத என்னதான் விஷயம் இருக்கும் உங்களுக்குள்ளே!''

அம்மா மூக்கின் மேல் விரலை வைத்து அதிசயித்துப் போகிறாள்.

● ● ●

அன்று விடியற்காலை நேரத்திலேயே மாணவியரின் ஆனந்த ஆரவாரங்களால் 'ஹாஸ்டல்' களை கட்டி நிற்கிறது. விடுதியி

### அழகிய கால்கள்

காலின் வடிவம் நேர்த்தியாய் இருக்க ஒரு பயிற்சி: கால் மேல் கால் போட்டுக்கொண்டு ஒரு நாற்காலியில் அமருங்கள். ஒரு காலைத் தரையில் ஊன்றிக் கொள்ளுங்கள். மறுகாலை வட்டமாய்ச் சுற்றுங்கள். வலது பக்கமாய், பிறகு இடது பக்கமாய். ஒவ்வொன்றும் பத்து முறை. பிறகு காலை மாற்றிப் போட்டுக் கொண்டு இதேபோல் செய்யுங்கள்.

—ராஜவேணி குப்புராமி



ருள்ள எல்லோரும் தேக்கடிக்கு உல்லாசப் பயணம் கிளம்பிக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் களியாட்டங்களிலேயிருந்து விலகியவளாய்ச் சோர்ந்திருக்கிறாள் ராஜி. கடந்த நான்கு நாட்களாக அடித்த கடுமையான காய்ச்சலால் உலர்ந்த சருகாய்க் கிடக்கும் ப்ரியாவை விட்டு விட்டுத் தான் மட்டும் 'எக்ஸ்கர்ஷன்' கிளம்ப அவளுக்குத் துளியும் விருப்பமில்லை.

''நீ புறப்படலேயா ராஜி?'' மெலிந்த சுவஸ்வரத்தில் ப்ரியா முனகுகிறாள்.

''நீ இல்லாமே... உன்னோடே பேசாமே... அந்த 'எக்ஸ்கர்ஷ'னிலே கலந்துக்க எனக்கு இஷ்டமில்லே ப்ரியா! நீ இங்கே உடம்பு முடியாமப் படுத்திருக்கப்போ நான் அங்கே போய் என்ன என்ஜாய் பண்ண முடியும்?''

''டோண்ட் பீ ஸில்லி ராஜி! குழந்தைத் தனமாய்ப் பேசாதே! ஒருத்தர் இல்லேங்கறதினாலே உலக இயக்கமே ஸ்தம்பிச்சு நின்னுடுமா என்ன? யூ ஹேவ் டு லேர்ன் கம்யூனிட்டி லைஃப்! விடுதி வாழ்க்கையோட நோக்கமே அதுதான். ட்ரை டு மூவ் வித் அதர்ஸ் ஆல்ஸோ. கம் ஆன். சியர் அப் ஸ்டார்ட்!''

விடாப் பிடியாய்ப் பிடித்துத் தள்ளி ராஜியைத் தேக்கடிக்கு அனுப்பி வைக்கிறாள், ப்ரியா! ராஜியோ போன இடத்தில் நிலை கொள்ளாமல் தரையில் போட்ட மீனாய் யாரோடும் ஒன்ற முடியாமல் தவிக்கிறாள்.

ஆனாலும் கால ஓட்டத்தில் பருவங்களின் சுழற்சியில் ராஜிக்குப் புகுந்த வீடாய்ப் பழகிப்போகிறது விடுதி. அனுபவப் படியிலே ஏற வைக்கிற ஆசானாக உலகியலைப் புரிந்து கொண்டு பலரோடும் ஒத்துப் போகப் பழக்குகிற பயிற்சிப் பாசறையாக விடுதி வாழ்க்கையை அவள் ஏற்க ப்ரியாவின் நட்புக் கலந்த வழிகாட்டுதல் தூண்டுகோலாகிறது.

• • •

சிட்டுக் குருவியாய்ச் சிறகடித்துப் பறந்தவர்கள் அவரவர் கூட்டுக்குள்ளேயே போய் ஒடுங்க வேண்டிய திருமணம் நெருங்குகிறது. பசுமை நிறைந்த நினைவுகளைப் பாட்டாய்ப் பாடித் தீர்த்துச் சொல்லாய்க் கொட்டி அடுக்கிப் பழகிப் பிரியும் துயரத்தில் ராஜியும், ப்ரியாவும் மூழ்கிப் போகிறார்கள். நண்பர்கள் பிரிந்தாலும் நட்பு சாஸ்வதமாய் நிலைக்க வேண்டும். சாகா வரம் பெற வேண்டும் என்றெல்லாம் என்னென்னவோ முடிவுகள், தீர்மானங்கள் அந்த இளம் உள்ளங்களில் உருப் பெறுகின்றன.

• • •

கடிதப் போக்குவரத்துக்களும் வாழ்த்துப் பரிமாறல்களும் வாரம் தவறாமல், மாதம் தவறாமல் வருடக் கணக்கில் அவர்களிடையே தொடர்கின்றன.

புதிதாய் ஏற்பட்டுவிட்ட திருமண பந்தம் அவர்களுக்கு இடையே யுள்ள மைல்களின் எண்ணிக்கையைக் கூட்டுகிறது. என்றாலும் மனங்களின் நெருக்கம் அதனால் மயிரிழை கூட விலகிவிடாமல் காத்துக் கொள்வதில் அவர்கள் கவனமாக இருக்கிறார்கள்.

பம்பாயிலுள்ள ஒரு பாக்டரியில் நிறைய பெண்களும் வேலை செய்கிறார்கள். அங்கு பின் வருமாறு ஓர் அறிவிப்பு வைத்திருக்கிறார்கள்.

''நீங்கள் லூசாக டிரஸ் பண்ணிக் கொண்டிருந்தால் மெஷின்களின் பக்கம் போகும்போது ஜாக்கிரதையாக இருங்கள்: டைட்டாக டிரஸ் பண்ணிக் கொண்டிருந்தால் மெக்கானிக்குகளின் பக்கம் போகும் போது ஜாக்கிரதையாக இருங்கள்.''

-பிரியா பாலு

குடும்பம் குழந்தை என்று படிப்படியே வட்டங்கள் விரிவடைந்து அனுபவங்கள் முதிரும்போது அவர்கள் நட்பும் பக்குவம் பெற்றுக் கனிகிறது. அடிக்கடி கடிதம் எழுதா விட்டாலும் ஒருவரை யொருவர் புரிந்து கொள்கிற அளவுக்கு; பொங்கல் வாழ்த்தோ, பிறந்த நாள் வாழ்த்தோ அனுப்ப விட்டுப் போய் விட்டால் கூடக் குழந்தைகளின் உடல் நிலையோ இயந்திர இயக்கமாய்ச் சுழலும் வேலைப் பளுவோ காரணம் எனத் தேற்றிக் கொள்கிற அளவுக்கு... என்றென்றும் உடனிருப்பதும்... நாளைக்கொரு கடிதம் போடுவதும்தான் அன்பின் அடையாளங்கள் என்ற நிலையை யெல்லாம் கடந்து விட்டதாய்... எப்பொழுதாவது அத்தி பூத்தாற்போல் அபூர்வமாய் ஒருவர் மற்றவருக்கு எழுதும்போது, எழுதியதைப் பெறும் போது அமைதியாய் உட்கார்ந்து சிந்தித்துப் பார்க்கும்பொழுது நெஞ்சைப் புளகிக்கச் செய்கிற தாய்மையான... இனிமையான அனுபவமாய் அந்த நட்பு பரிணமிக்கிறது. 'ப்ரியா இன்றி ராஜி இல்லை' என்று பேச வைத்த விடுதிப் பழக்கங்கள் இன்று ராஜியினுள் ஒரு ப்ரியாவையும், ப்ரியாவினுள் ஒரு ராஜியையும் என்றென்றைக்குமாய் நிலைக்க வைக்கின்றன.

• • •

தன் மடியிலேயே படுத்துத் தூங்கிப் போய்விட்ட, குழந்தைத்தனம் இன்னும் மாறாத தன் மகளைப்பாசத்தோடு பார்க்கிறாள் ராஜி! 'சர்க்கரை கரைந்த பின்னரும் நாவில் அது விட்டுச் செல்லும் இனிப்பாக, நெஞ்சின் ஆழத்தில் இனியதொரு தடம் பதிக்கும் நினைவுச் சுவடாக, நட்பு அனுபவமாகும் நேரத்தில் இந்தத் தற்காலிக வருத்தங்களும் உஷாவிடமிருந்து மறைந்துவிடும்' என எண்ணியவளாக அவளைத் தூக்கிக் கொண்டு போய்ப் படுக்கையில் கிடத்துகிறாள்.

---

பெண்களின் இரண்டு சொட்டுக் கண்ணீருக்கு நூறு சொற்களைவிட வலிமையுண்டு.

—காண்டேகர்

# உங்கள் சிறுநாணயங்கள் பெருந்தொகையாக வளர உதவும் திறவுகோல்



## எங்களிடம் இருக்கிறது. எனவே நீங்கள் சேமித்ததை வீணாக செலவிட முடியாது!

**ஜனதா டெபாஸிட் கணக்கில் உங்களுடைய சில்லறைக் காசுகளை சேமியுங்கள்**

ஜனதா டெபாஸிட் கணக்கைத் துவக்கும் போது ஸ்டேட் பாங்கிலிருந்து இலவசமாக சேமிப்புப் பெட்டி ஒன்று உங்களுக்குக் கிடைக்கிறது. அந்தப் பெட்டியில் உங்களால் முடிந்த போதெல்லாம் உங்களுடைய சில்லறைக் காசுகளை சேமித்து வாருங்கள்.

**உங்கள் இல்லத்திலேயே பணிபுரியும் ஒரு பாங்க்**

நீங்கள் பாங்குக்குப் போகவேண்டிய அவசியமில்லை. எங்களுடைய அங்கீகாரம் பெற்ற டெபாஸிட் வசூலிப்பவர் உங்கள் இல்லத்திற்குத் தவறாது வருவார். அந்தப் பெட்டியில் உள்ள பணத்தை உங்கள் முன்னிலையில் எடுத்து பாஸ் புத்தகத்தில் குறித்து உங்களிடம் ரசீது ஒன்று தருவார். பிறகு உங்களிடம் உள்ள அந்த சேமிப்புப் பெட்டியை பூட்டித் திறவுகோலை தன்னிடமே வைத்துக் கொள்வார். ஆகவே பெட்டியை உங்கள் மனம்போல திறந்து பணத்தை செலவு செய்து விடமாட்டீர்கள்.

**சேமிப்புப் பெட்டியில் சேர்த்ததைவிட கூடுதலாக பணம் உங்களுக்குக் கிடைக்கிறது.**

அந்தக் கூடுதல் பணம்தான் 61வது மாத முடிவில் உங்கள் சேமிப்பின்மீது கிடைக்கும் 7 சதவிகித வட்டி. உங்களுடைய சில்லறைக் காசுகள் எப்படிப் பெருகி வளர்கிறது என்பதைப பாருங்கள். ஸ்டேட் பாங்கின் 990க்கு மேலுள்ள கிளைகளில் நீங்கள் ஜனதா டெபாஸிட் கணக்கைத் துவக்க முடியும்.

## ஸ்டேட் பாங்கின் ஜனதா டெபாஸிட் கணக்கு

குழந்தைகள், மாதர்கள் மற்றும் சிறிய டெபாஸிட் தாரர்கள் எல்லோருக்கும் உகந்த ஒரு கணக்கு

**ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா**



**வெள்ளி விழா 1980**




**ஜனதா டெபாஸிட்டுகளை வசூல் செய்யுங்கள்...கணிசமான வருமானத்தைப் பெறுங்கள். ஸ்டேட் பாங்கின் அங்கீகாரம் பெற்ற டெபாஸிட் வசூலிப்பவராக பணியாற்றுங்கள்.**

நீங்கள் ஓய்வுபெற்ற ஆசிரியராகவோ, போர்த்துறைப்பணியிலிருந்து விலகியவராகவோ, வேலையில்லாதவராகவோ இருந்தால்... நீங்கள் ஜனதா டெபாஸிட் வசூலிப்பவராக முடியும், உங்களுடைய மாத வருமானத்துடன் நீங்கள் வசூலிக்கும் டெபாஸிட் தொகை மீது கிடைக்கும் கமிஷன் தொகையையும் சேருங்கள். உங்களுடைய வருமானத்தொகை உங்களையும் உங்கள் திறமையையும் பொறுத்து அமையும்.
உங்களுக்கருகில் உள்ள ஸ்டேட பாஙக் கிளையின் கிளை மானேஜரை விசாரிக்கவும்

CHAITRA-SBI-667 TAM

**இந்தியாவின் மிகப் பெரிய பாங்க்— ஸ்டேட் பாங்கில் சேமியுங்கள்**

# நகையில் நவீன நாகரிகம்!



[பனகல் பார்க் உம்மிடி பங்காரு செட்டி நகைக் கடையில் நுழைந்து கேள்விக் கணைகளைத் தொடுத்ததும் திரு ஸ்ரீஹரி மகிழ்ச்சியுடன் பதில் கூறுகிறார்:]

"இந்த அபரிமிதமான தங்க விலை உயர்வு தங்கள் தொழிலைப் பாதித்திருக்கிறதா?"

"எங்கள் தொழிலில் இதுமாதிரி ஒரு நிலையை இதுவரை சந்தித்ததே இல்லை. இந்தத் தங்க விலை உயர்வு நம் நாட்டுப் பிரச்னை மட்டும் இல்லையே! உலக மார்க்கெட் விஷயம்!"

"இங்கு வரும் வெளிநாட்டினர் நம் நகைகளை விரும்பி வாங்குகிறார்களா?"

"நிச்சயமாக நம் கைவேலையை மெச்சி, வாங்குகிறார்கள். ஆனால் இந்த விலை ஏற்றத்தின் பாதிப்பு அவர்களுக்கும்தானே இருக்கிறது!"

வெளி நாட்டினர் பொதுவாகத் தூய தங்க நகைகளையே விரும்புகிறார்களாம். உண்மையான உயர்ந்த சிவப்பு, பச்சை வைத்தால் வாங்குவார்களாம். ஆனால் செயற்கைக் கற்களை வைத்து வாங்க விரும்புவதில்லை. நம் பெண்கள் அணியும் மெட்டி, கொலுசு, நெக்லெஸ், செயின், வளையல்கள் இவற்றையெல்லாமும் அவர்கள் விரும்பி வாங்குகிறார்கள். போட்டுக் கழற்ற வசதியாக வளையல்களைப் பெரிதாகச் செய்ய ஆர்டர் கொடுக்கிறார்கள். வேலைப்பாடுகள் செய்த பெரிய மோதிரங்களிலும் அவர்களுக்கு விருப்பம் அதிகம்.

"இந்த விலை ஏற்றத்தால் ரொம்பப் பேர் வீட்டில் இருக்கும் தங்கத்தை விற்க வருகிறார்கள். இந்த நேரத்தில் விற்றால் நிரம்பப் பணம் பண்ணலாமே என்ற எண்ணம்!"

"செய்த நகையைப் பாட்டர்ன் மாற்ற வேண்டும் என அழித்தால் தங்கம் குறைகிறதே! இதை எப்படிச் சமாளிக்கலாம்?" என வினவும்போது, "எந்த நகையையும் பொடி இல்லாமல் செய்ய முடியாது. அதனால்தான் எங்களிடம் வாங்கிய நகையானால் நாங்கள் எடைக்கு எடை கொடுத்து எடுத்துக் கொள்கிறோம். எங்கள் வாடிக்கைக்காரர்களுக்காக ஏற்படும் நஷ்டத்தை நாங்கள் ஏற்கிறோம்," என்கிறார்.

"தங்கத்தின் விலை ஏற்றம்தான் உங்கள் வியாபாரத்துக்குத் தடங்கலா?"

"அது மட்டுமல்ல, வரி அதிகம் போடுகிறார்கள். ஒருவர் எங்களிடம் தங்க நகையை விற்றால் அதற்கும் வரி உண்டு. வாங்கினால் அதற்கும் வரி உண்டு. மக்கள் வரியைத் தவிர்க்கச் சாதாரண நகைத் தொழிலாளர் சிலரிடம் ஏமாறுகிறார்கள்."

"இப்போது லேட்டஸ்ட் ஃபாஷன் என்ன?"

"அடுக்கடுக்காக ஆறு வரிசைகள் கொண்ட செயின். இதனை மூன்று சவரனில் தயாரிக்கலாம்." (படம்).

"அயல் நாடுகளில் நீங்கள் நகை வியாபாரத்தைத் துவங்க அபிப்பிராயம் உண்டா?"

"யு. எஸ். ஏ.யில் துவங்க அபிப்பிராயம்!"

"தொழில் தொடர்பாக நீங்கள் சந்திக்க நேரும் சிக்கல்கள்?"

"நிறைய உண்டு. முதலில் தங்கம் கலப்பில்லாதது என்பதைப் பரீட்சை செய்ய இங்கு வசதி இல்லை. ஒவ்வொரு முறையும் பம்பாய் போக வேண்டும். இதனால் ஆபத்து உண்டு. செலவும் அதிகமாகிறது. இங்கேயும் அதற்கெல்லாம் வசதியை அரசாங்கம் செய்து தரவேண்டும். கணிசமான அளவு தங்கத்தைத் தொழிலாளியிடம் நம்பித் தருகிறோம். அவை நகைகளாகி வரும்போது மாற்றுக் குறையாமல் இருக்கிறதா எனப்பார்க்க இங்கு வழி கிடையாது. நம்நாட்டின் நகைக்கலைக்கு நல்ல கிராக்கி உலக மார்க்கெட்டில் உண்டு. அதை நாம் முழுமையாகப் பயன்படுத்த முடியாமலிருக்கிறது. அரசின் கொள்கைகளும் வரிகளும் குறுக்கிடுகின்றன."

# பிளாஸ்டிக் மலர்

குயிலி ராஜேஸ்வரி

மகிழ்ச்சி பொங்கியது சசிக்கு. பல வருடங்களாக அவள் திட்டமிட்டது இன்று கைகூடப் போகிறது என்றால் மகிழ்ச்சி பொங்காமலா இருக்கும்? தன் அருமை மகன்... செல்ல மகன் ஜிதேந்திரனைக் காஷ்மீருக்கு அழைத்துச் செல்ல வேண்டும். அந்த இயற்கைக் காட்சிகளையும், ஃபௌண்டன் அழகுகளையும் காட்ட வேண்டும். அவன் ஆச்சரியத்தில் கண்கள் விரிய அவைகளைப் பார்ப்பான். படகு வீட்டில் அவனை அமர்த்தி மிதந்து கொண்டு போனால் அவன் எவ்வளவு மகிழ்ச்சியடைவான்! இவைகளை நினைக்கும் போதே அவள் இன்பத்தில் மிதந்தாள்.

சசி உயிரை விட்டு வேலை செய்வதே ஜிதேந்திரனுக்காகத்தான். கணவருடைய வருமானத்தில் மட்டும் சற்று உயர்ந்த, தரமான வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முடியாது. குழந்தையை உயர்ந்த பள்ளிக்கு அனுப்பி நல்ல கல்வியைத் தரலாம் என்றெல்லாம் நினைத்துத்தான் அவள் வேலைக்குப் போவதைத் தொடர்ந்தாள். அவளுடைய கணவர் சங்கர்கூட அடிக்கடி சொல்வதுண்டு. "சசி, நீ ரொம்ப ரொம்ப உன்னைக் கஷ்டப்படுத்திக் கொள்கிறாய். வீட்டிலேயும் வேலை, காரியாலயத்திலும் வேலை. ஓய்வே கிடையாது. இப்படி உழைத்தால் உடம்பு தாங்குமா? முதலில் இந்த டென்ஷனைச் சொல். காலையில் எட்டரை மணிக்குள் இவ்வளவு வேலைகளையும் செய்து உணவு தயாரித்து, குழந்தையைப் பள்ளிக்கு அனுப்ப எல்லாம் செய்து அப்பப்பா.... தாங்காது சசி. உன் ஆயுள் குறைந்து விடும்!" என்பார்.

"நம் மகன் ஜிதேந்திரன் மிகவும் பிரமாதமாக இருக்க வேண்டும். அவன் உயர்ந்த படிப்புகள் படித்து, சிறந்த பதவி வகிக்க வேண்டும். அதுதான் என் ஆசை. நான் என்ன சிலரைப் போல் புடவைகள் வாங்கவும், நகைகள் செய்து கொள்ளவுமா வேலைக்குப் போகிறேன்? உங்கள் வருமானத்தில் நம் குடும்பத்தை நடத்துவோம். என் வருமானத்தை அவனை உயர்த்தச் செலவழிப்போம். சரிதானே!" என்பாள்.

அவளுடைய ஆசைகள் சங்கருக்கு நியாயமாகத்தான் தோன்றும். ஆனால் அதற்காக அவள் தன்னை வருத்திக்கொள்வதைப் பார்த்தால் சங்கருக்குக் கண்ணில் ரத்தம் தான் வரும்.

இரண்டு பேரும் சம்பாதிப்பது வீட்டின் நிலையை உயர்த்துகிறதோ இல்லையோ சுற்றியுள்ளவர்களிடம் பொறாமையை நன்றாக வளர்த்திருந்தது. அதே தருணத்தில் எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் அவர்களுடைய பண உதவியைப் பெரிதும் நாடினர். இதெல்லாம் தெரிந்தும் அதிகம் காட்டிக் கொள்ளவில்லை. காரணம், எந்தச் சந்தர்ப்பத்திலும் அவர்கள் உதவி நமக்குத் தேவைப்படலாமே என்ற நினைப்புத்தான்!

குழந்தையை யாரிடம் கொடுத்துப் பார்த்துக்கொள்ளச் சொல்வது என நினைத்து, அதற்கென ஒரு வேலைக்காரியை அமர்த்தினர். சின்னம்மாவும் வஞ்சனையில்லாமல் ஜிதேந்திரனைக் கவனமாகப் பார்த்துக்கொண்டாள். வேளா வேளைக்கு உணவு கொடுத்து, உடை உடுத்தி, விளையாட்டுக் காட்டி, அவனைத் தூங்க வைக்கப் பாடி, எல்லாம் அயராமல் செய்தாள் சின்னம்மாள். ஒரு வயதில் அவனைக் கவனிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டவள் சின்னம்மாள். ஜிதேந்திரனுக்கு ஆறு வயதாகியும் இன்னும் முகம் சிணுங்காமல் செய்கிறாள். சசியும் அவளை வீட்டில் ஒருத்தியாகத்தான் நடத்தினாள்.

ஜிதேந்திரனுக்கு உயர்ந்த உடைகள் வாங்கித் தர முடிந்தது. ஆரோக்கியமான உணவு, முதல் தரக் கல்வி எல்லாம் சசி அவனுக்குத் தன் உழைப்பால் தர முடிந்தது. ஆனால் ஒரு ஐந்து நிமிடம் கூட அவனை வைத்துக் கொஞ்சி மகிழ அவளுக்கு நேரமில்லை.

இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு காரியாலயத்தில் கிடைத்த சலுகையில் தன் மகனைக் காஷ்மீர் அழைத்துப் போக நினைத்தாள் சசி. சங்கர் காரியாலய விஷயமாக மூன்று மாதம் வெளியூர் போகவேண்டியிருந்ததால் தன் தோழியின் குடும்பத்தோடு அவள் சேர்ந்து கொண்டாள்.

எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டு அன்று வீடு திரும்பியபோது அவள் தொய்ந்து போயிருந்தாள். கணவர் கூட வரவில்லையே என்ற குறை மனம் நிறைய இருந்தாலும், அது சாத்தியப்படாது என்பதால் தன்னைத் தேற்றிக் கொண்டாள் சசி.

தன் மகனை ஆசையுடன் வாரி அணைத்து, "ஜிதேந்திரா! நீ எத்தனை பெரிய அதிருஷ்டக்காரன்! உன் வயதில் இத்தகைய வாய்ப்புகள் எங்களுக்கு எங்கே கிடைத்தது? நாம் நாளை காஷ்மீர் பார்க்கப் புறப்படுகிறோம். அங்கு பூக்கள் பாயாகப் படர்ந்திருக்கும். பழங்கள் மலையாகக் குவிந்திருக்கும்! தெரியுமா உனக்கு?" என்றாள்.

ஜிதேந்திரன் கண்களை அகல விரித்தான்.

''நாளை நீயும் நானும் ரயிலில் 'ஜம் ஜம்' மென்று போவோம். உனக்குக் காஷ்மீர் டிரஸ் வாங்கித் தரட்டுமா?'' என்றான்.

''நீயும் நானும் மட்டும்தானா?'' என்றான் அவன்.

''ஆமாம், அப்பாவுக்கு வேலை இருக்கே?'' என்றான்.

''சின்னம்மா வரமாட்டாளா?''

''எப்படி அவள் வரமுடியும் ஜிது? இரண்டு டிக்கட்டுகள்தானே இருக்கு?''

''நான் வரமாட்டேன் போ! சின்னம்மா வராவிட்டால் நானும் வரமாட்டேன்!'' கோபம் அவன் குரலில் தெரிந்தது.

''நான்தான் சொல்றேனே ஜிது! இரண்டு டிக்கட்டுகள்தானே இருக்கு. எப்படி மூன்று பேர் போக முடியும்?''

''அப்படியானால் சின்னம்மாவும் நானும் போகிறோம்!''

''என்னடா இது? நான் இவ்வளவு ஆசையா உன்னைக் கூப்பிடறேன். நீ இப்படிப் பேசறியே! உனக்கு என்னைப் பிடிக்கல்லே?''

''சின்னம்மா இல்லாட்டா எனக்கு யார் குளிப்பாட்டுவா? யார் சாப்பாடு போடுவா? யார் டிரஸ் பண்ணுவா? எல்லாம் சின்னம்மா தானே பண்றா? அவ இல்லாமே நான் எப்படி வர முடியும்?''

''என்னடா ஜிது! இப்படிப் பேசலாமா?''— அவனுக்குத் துக்கம் பீறிக்கொண்டு வந்தது.



பெண் இளமையில் ஒருவர் மனைவி - நடுத்தர வயதில் உற்ற நண்பர் - வயதானபோது போஷகர்.

-ஃப்ரான்சிஸ் பேக்கன்

''நான் காஷ்மீர் வரலேம்மா. சின்னம்மாவை விட்டுட்டு என்னால வர முடியாது! பாவம் சின்னம்மா! நான் இல்லேன்னு அழுதுடுவா!'' எனச் சொல்லி ஓடிவிட்டான் ஜிதேந்திரன்.

அவன் சென்ற திக்கையே பார்த்துக் கொண்டு பிரமித்துப் போய் நின்றாள் சசி. அவளுக்கு உள்ளமே வெடித்து விட்டது போல் இருந்தது. அருகில் இருந்த சோபாவில் சாய்ந்து குமுறிக் குமுறி அழுதாள் அவள்.

இவற்றையெல்லாம் கவனித்த சங்கரன் அருகில் வந்து ஆறுதலாக அவளைத் தடவிக் கொடுத்தார்.

''இதைப் பாருங்களேன்! நான் உயிரையே கொடுத்து இவனுக்காக வேலை செய்கிறேன். இப்படிக் கடுகளவு கூட என்னிடம் பாசம் இல்லாமல் இருக்கிறானே இவன்? நான் என்ன ஒவ்வொருத்தரைப் போல் நகையும், புடவையுமா வாங்கிக்கறேன், நான் சம்பாதிக்கும் பணத்தில்?'' அவள் நெஞ்சை அடைத்தது. ''அப்படியானால் இத்தனை வருடங்களாக நான் ஓய்வில்லாமல் உழைத்தேனே அதற்கு அர்த்தமே கிடையாதா?'' அவள் அவன் மடியில் தலையைப் புதைத்துக் கொண்டு குலுங்கினாள்.

அவள் நிலையைப் பார்க்கச் சங்கருக்கும் பரிதாபமாகத்தான் இருந்தது. ''சசி! ஒன்றை நீ மறந்து விட்டாய். ஜிதேந்திரன் சின்னப் பையன்தானே? பழத்தை ருசித்துச் சாப்பிடுகிறவன் யாரும் அந்தப் பழத்துக்கு எது எருவாகிறது என்று ஒரு விநாடி கூட ஆராய்வதில்லை. ஜிதேந்திரனுக்குத் தனக்குக் கிட்டும் வசதிகள் எல்லாம் உன் உழைப்பினால் தான் கிட்டுகிறது என்பது எப்படித் தெரியும்? அவனைப் பொறுத்தவரை சின்னம்மாதான் எல்லாம் செய்கிறாள் என்பது நினைப்பு. அம்மா தனக்காக ஓடாக உழைக்கிறாள் என்பதை அவனுக்கு யார் எடுத்துச் சொல்கிறார்கள்? அம்மாவின் நேரடி அன்புப்பொழிதல் இல்லாததால், அநேக குழந்தைகள் தன் அன்னை தன்னைக் கவனிப்பதில்லை, தனக்காக எதுவும் செய்வதில்லை என்றுதான் நினைக்கின்றன. குழந்தையின் வசதியையும், நிலையையும் நீ பணத்தால் உயர்த்தலாம். ஆனால் அவன் பாசத்தைப் பெற வழியே யில்லை. இருப்பினும் இன்னும் சில ஆண்டுகளில் உன் பெருமையை உன் மகன் உணர்வான். கவலைப்படாதே!'' என ஆறுதல் கூறினார்.

சசிக்குத் தலையைப் பிய்த்துக் கொண்டு சுவரில் முட்டிக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. என்ன அநியாயம்! வேலைக்குப் போகும் பெண்களுக்குச் சொகுசு, சுகந்தான் கிடையாது. குழந்தைகளிடமிருந்து—தான் பெற்ற குழந்தைகளிடமிருந்து கூடவா பாசம் கிடைக்காது? இதற்கு அவளுக்குப் பதில் கிடைக்கத்தான் இல்லை.

அவனுக்காகத்தான் அவள் உழைத்தாள். அவள் உழைப்பில் அவனுக்கு உயர்தரக் கல்வியும் இதர வசதிகளும் கிடைத்தன. ஆனால் தனக்குக் கிடைக்கக் கூடிய மாபெரும் பற்றுதல் போய்விட்டதே! அழகான பிளாஸ்டிக் மலரைப் போலத்தானா அவள் நிலை?

இது சசிக்கு மட்டுமா? இன்று உழைக்கும் பல தாய்மார்களும் இந்தக் குமுறலில் வெந்துகொண்டுதான் இருக்கிறார்களா?

பயணத்துக்காக எடுத்து வைத்தவைகளைப் பிரித்து சசி எடுத்து வைப்பதைப் பார்க்கும் போது சங்கருக்கும் மனம் கஷ்டப்படத்தான் செய்தது.

''அப்படியானால் நானே வழக்கம்போல்காரியாலயம் போகப் போகிறாயா சசி?'' என்றான்.

''கழுதை கெட்டாக் குட்டிச்சுவர், வேறு என்ன பண்ணுவது? தண்டத்துக்கு வீட்டிலே உட்கார லீவு போடுவானேன்?'' எனச் சற்றுக் காரமாகவே கேட்டாள் சசி.

''சசி! உன்னுடைய அதிகப்படியான ஆவலானாலும், கற்பனையானாலும் இந்தச் சின்னக் குழந்தையிடம் நீ ரொம்ப எதிர்பார்க்கிறாய்; ஒரு குழந்தையைப் புரிந்து கொள்ள வேண்




எல்லோருடைய பெயர்களிலும் ரோடுகள் அமைவதுபோல்,பெண்கள் அணியும்'ப்ரா'வுக்குக் கூட ரோடு ஒன்று சென்னை அண்ணாமலை மன்றம் அருகில் வந்துவிட்டது! வியப்பாக இருக்கிறதா? 'FRASIER' ரோடு என்பதைத்தான் தமிழில் 'பிரேசியர்' ரோடு என்று எழுதியிருக்கிறார்கள்!

—தகவல்: நிவேதாமூர்த்தி

**வாங்காத புடவை**

மனத்தில் நிறைந்து
உணவில் கலந்து
பகலிலும் இரவிலும்
பாடாய்ப் படுத்துதே

கனவில் விரிந்து
உயிரில் அமர்ந்து
நினைவில் உறைந்து
வாங்காத புடவை!

— ஆர். சாரதா



# GULMARG

# குல்மார்க்



## குல்மார்க்

- ரெப்ரிஜிரேடர்ஸ்
- ஏர்கூலர்கள்
- பாட்டில் கூலர்கள்
- டீப்ஃப்ரீசர்ஸ்
- ஒலிபெருக்கி கருவிகள்
- சன்ஃப்லோ வாட்டர் ஹீட்டர்கள்
- ஆர்க்டிக் ஏர்கண்டிஷனர்ஸ்

KANARA/EL/102

# எலெக்ட்ரானிக்ஸ் லிட்.

# Electronics Ltd

**makes good things even better!**

18, PATULLOS ROAD, MADRAS-600 002 Phone: 812352

DEALERS:

MADRAS: S. C. Shah, Ph: 88671 & 83375 Cool Aids, Ph: 446400 Harmony, Ph: 446970 TRICHY: A. C. & R Enterprises, Ph: 23978 Venkateswara Refrigeration, Ph: 25414 PONDICHERRY: Jayanthi Electronics, Ph: 2305 SALEM: Devi Agencies, Ph: 5686 COIMBATORE: Rajiv & Co., Ph: 25878 POLLACHI: Laxmi Electronics, Ph: 3269 TIRUPUR: Chitra Radios, Ph: 21122 KUMBAKONAM: Moorthi Radios, Ph: 210 TIRUNELVELLI: Nellai Trading Engineering Co., Ph: 344 MADURAI: Climate Engineers, Ph: 31427

# பொறியைத் தட்டியதுமே...







காம்ப்டாலக்ஸ் ஸ்பாட்லைட்
துணிகளின் டிசைன்களைத் தனித்
தொளிரச் செய்கிறது—பார்ப்பவ-
ரைக் கவர்ந்திழுக்கும் வகையிலே.



உங்கள் வைரங்களிலே
மேலும் அதிக ஜொலிப்பு—
காம்ப்டாலக்ஸ்
ஸ்பாட்லைட் மூலம்.

PE-_-4365

காம்ப்டாலக்ஸ், எடுத்துப் பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ இணைப்புகளோ தேவையில்லை. பொருத்துங்களேன், பொறியைத் தட்டியதும், அதன் விற்கும் திறனை அறியலாமே!




1879-1979
100 YEARS
ELECTRIC
LIGHT

# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம், எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

**பிலிப்ஸ்**

டும் என்றால் ஓரளவு அதோடு வாழ வேண்டும் சசி. பொருள்களை நிரப்புவதால் மட்டும் குழந்தையின் நேசத்தைப் பெற முடியுமா?''

''அதோடு வாழ எனக்கு நேரம் எங்கே இருக்கிறது?''

''அங்குதான் உனக்குச் சாமர்த்தியம் வேண்டும். எப்படியோ சிறிது நேரத்தை நீ அவனோடு கழிக்க வேண்டும். இப்பவும் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. நீ எடுத்துக் கொண்ட லீவை இவனோடு வீட்டில் கழித்து விடு. பத்து நாட்கள் சின்னம்மாவுக்கு ஓய்வு கொடு. அவள் வரவேண்டாம். அவனுடைய தேவைகளை நீயே கவனி. அதற்குப் பிறகு ஏற்படும் மாறுதலைப் பார்'' என்றார் சங்கரன்.

சசி சிறிது நேரம் யோசித்தாள். 'சரி, இந்த முயற்சியையும் செய்து பார்த்து விடுவோமே' என அதனை ஏற்றுக்கொண்டாள்.

**நா**ட்கள் வேகமாகப் பறந்தன. ஆரம்பத்தில் அம்மா சொல்வதைக் கேட்க ஜிதேந்திரன் முரண்டு செய்தாலும் நாளடைவில் அவன் அம்மாவுடன் ஒட்டிக் கொண்டு விட்டான். அவனுக்கு ஒவ்வொருவேளையும் உணவு கொடுக்கும்போது அம்மா எவ்வளவு அக்கறை எடுக்கிறாள்! அவன் சூடு இல்லை என்றால் உடனே சூடு பண்ணித் தருகிறாள். சின்னம்மாவைப் போல 'சரிதான் சாப்பிடு' என்று சொல்வதில்லையே!

சாப்பாடு தரும்போது எவ்வளவு நல்ல நல்ல கதைகள் எல்லாம் சொல்கிறாள்! சின்னம்மா உடுப்புப் போடும்போது 'சட்டையைத் தலையில் மாட்டி இழுப்பாளே! அம்மா எவ்வளவு நாசுக்காக வாரின கிராப் கலையாமல் சட்டை போடுகிறாள்! மடியில் தன்னைத் தலைவைத்துப் படுக்கச் சொல்லிப் பாடித் தூங்க வைக்கிறாளே! இந்தச் சின்னம்மாவுக்கு இதெல்லாம் எங்கே தெரியும்? என்றெல்லாம்ஜிதேந்திரன் சிந்திக்கத்தொடங்கினான். 'இந்த அம்மா நம்ம கூடவே இருந்தால் எப்படி நன்றாக இருக்கும்! அம்மாவோட காஷ்மீர் போனால் எவ்வளவு ஜோராக இருக்கும்' என்றெல்லாம் அவன் மனம் கணக்குப் போட ஆரம்பித்தது. அவன் தனிர் மனத்தில் அம்மா உயர்ந்த இடத்தைப் பெற்று விட்டாள்.

அன்று சசி அவனுக்காகப் பட்சணங்கள் தயாரித்துக் கொண்டிருந்தபோது, ஜிதேந்திரன் ஓடிவந்து அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''அம்மா, நீ இனிமே என்னோடேயே இருக்கயா? என்னை விட்டுட்டு ஆபீஸ் போகாதே அம்மா. நாம இரண்டு பேரும் இன்றே காஷ்மீர் போகலாமா? அதான் அப்பா கூட ஊரிலிருந்து வந்து விட்டாரே!'' என்றான்.

இதைக் கேட்டவுடன் அவளுக்கு ஏதோ இன்ப லோகத்தில் பறப்பது போல் இருந்தது. அவனை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டு, ''அதுக்கென்னடா கண்ணு! அப்பா கிட்டச் சொல்லிவிட்டுப் புறப்படலாமான்னு கேட்கிறேன்'' என்றாள் உவகையோடு.

அன்று மாலை சங்கர் வீட்டில் நுழைந்ததும் அவரிடம் இதனைக் கூறி, ''இந்தச் சில நாட்களில் ஜிதேந்திரன் என்னுடன் எப்படி ஒட்டிக் கொண்டு விட்டான் பார்த்தீர்களா?'' என வியந்தாள்.

''இது நான் எதிர்பார்த்ததுதான் சசி. உனக்குத் தெரியாதா 'பிளட் இஸ் திக்கர் தென் வாட்டர்' என்று சொல்லுவோமே! ஒரு குழந்தையை முழுவதும் புரிந்து கொள்ள அதனோடு நாம் வாழ வேண்டும். நீ பணத்தால் செய்யும் பெரிய விஷயங்களைப் பற்றி அவனால் புரிந்து கொள்ள முடியாது. நல்ல வேளை! அவனுடைய இந்த ஏக்கம் உனக்கு இப்பவே புரிந்ததனால் மாற்ற முடிந்தது. குழந்தைகளின் இந்த மனநிலையைத் தாய் புரிந்து கொள்ளாமல் செயல்பட்டால் என்ன ஆகிறது தெரியுமா? இது வளர்ந்து அவர்கள் கல்லூரியில் படிக்கும் போதுகூட நம்ம அம்மா நமக்கு ஒண்ணும் செய்ய மாட்டாள்; அவளுக்கு நம்மிடம் பாசமே கிடையாது என்ற நினைப்புத்தான் மேலோங்கி நிற்கிறது. போறாத குறைக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர்கள் எல்லாம் வேறு உங்கம்மாவுக்கு உன்னைப் பற்றி என்ன கவலை இருக்கு என்று தூபம் போட்டு இந்தப் பிரிவினையை வலுப்படுத்தி விடுகின்றனர். இதனாலேயே பெரியவனாக ஆன போதும் அம்மாவுக்குச் செய்வது நம் கடமை என்பது அறவே அவனுக்கு மறந்து போகும். ஒன்று சொல்கிறேன், தெரிந்துகொள் சசி, உன்னுடைய எல்லா வேலைகளோடு வருடத்தில் ஒரு பதினைந்து நாளாவது நீ உன் ரொட்டீன் வேலைகளை மாற்றிக் கொண்டு அவனோடு செலவழிக்க வேண்டும். அப்போது ஜிதேந்திரன் ஒவ்வொரு ஆண்டும் இந்தக் காலத்தை ஆவலோடு எதிர்பார்ப்பான். இதுவே பாசப் பிணைப்புக்கு ஒரு வழியாகும்'' என முடித்தார்.

சங்கர் கூறிய இந்தக் கருத்துக்கள் அவளை மிகவும் வியப்படை வைத்தன. இனி தலை போனாலும் சரி, வருடத்தில் சில நாட்கள் விடுமுறை எடுத்துக் கொண்டு அவனோடு செலவிடுவது என்று முடிவுக்கு வந்தாள். ஏதோ ஒரு பெரும் புதையலைப் பெற்றுவிட்ட நிம்மதி அவளுக்கு ஏற்பட்டது. 'பிளட் இஸ் திக்கர் தென் வாட்டர்' - ரொம்பக் கரெக்ட்! என அவள் உள் மனம் மகிழ்ந்தது. இனி ஜிதேந்திரனை — அவள் அருமைச் செல்வத்தை யாரும் அவளிடமிருந்து பிரிக்க முடியாது என்ற உணர்வு பெரும் தெம்பைக் கொடுத்தது சசிக்கு. வாழ்க்கையில் வெற்றி பெற எத்தனை அனுபவப் பாடங்களைக் கூர்ந்து கவனிக்க வேண்டியிருக்கிறது!




பெங்களூர் ஊர்வசி தியேட்டரில் கீழ் வகுப்பிற்கு இந்திரலோகம் என்றும், பால்கனிக்குச் சந்திரலோகம் என்றும் பெயர்கள் சூட்டியுள்ளனர்.

—மைதிலி

---

மதப்பற்று இல்லாத அழகிய பெண்கள் நறுமணம் இல்லாத மலர்களைப் போல்தான்.

—ஹீன்



# அழகான கோலங்கள்

தமிழ் நாட்டின் தனிப் பெருமை வீட்டு வாசலில் போடும் கோலங்கள். வெளி நாட்டினரை இவை மிகவும் கவர்கின்றன. பாண்டிச்சேரி ஆரோவில்லில் உள்ள ஒரு ஜெர்மானியர் ஐம்பது கோலங்களைத் திரட்டி அவற்றைக் கையினால் செய்த காகிதத்தில் ஸ்கிரீன்பிரிண்ட் முறையில் மிக நேர்த்தியாக அச்சிட்டிருக்கிறார். புத்தகத்தின் விலை 120 ரூபாய்! கோலத்தின் பின் பக்கம் உள்ள விளக்கங்கள் தவறாகவே உள்ளன. ஆயினும் கோலத்துக்கு வெளி நாட்டினரிடம் அதிக ஆர்வம் இருக்கிறது என்பதை இப்புத்தகம் நிரூபிக்கிறது. அயல் நாட்டவர் பலர் வாழ்த்து மடல்களிலும் கோலத்தைப் பயன்படுத்துகின்றனர்.

நம் நாட்டினரில் பலர் இந்தக் கலையை மிகவும் சாதாரணமாக நினைத்து விடுகின்றனர். ஆனால் இதில் பல வியத்தகு விநோத பாணிகள் உண்டு. திருமதி கமலா குமார் மூன்று வகைகளை விளக்குகிறார்:

### தண்ணீர் மேல் கோலம்

ஒரு பாத்திரத்தில் முக்கால் நீர் எடுத்துக் கொண்டு அது அப்படியே அசையாமல் இருக்குமாறு வைக்கவும். மின் விசிறியைச் சுழல விடக் கூடாது. அடுப்புக் கரியை நன்றாக மிக மிக சன்னமாகப் பொடி செய்து தண்ணீரில் தூவ வேண்டும். பிறகு இன்னொரு முறை அதன் மேல் தூவ வேண்டும். அது கனமாகி, கறுப்புத் தளம் போட்டாற் போல் நிற்கும்! கோலம் போடுவதற்குப் பயன்படும் வெள்ளைக் கல் மாவில் ரங்கோலி நிறப் பொடியைக் கலந்து அதன் மேல் கோலம் போட்டால் அப்படியே நிற்கும். பாத்திரத்தை அசைத்தாலும் வேகமான காற்று வீசினாலும் கோலம் கலைந்துவிடும்.

### நீருக்குள் மெழுகுக் கோலம்

நமக்குத் தேவையான கோலத்தைத் தாம்பாளத்தில் வரைந்து கொள்ள வேண்டும். பிறகு சாதாரண மெழுகை நன்றாக உருக்கி அதில் ரங்கோலிப் பொடியைக் கலக்க வேண்டும். அதை அப்படியே தாம்பாளத்தில் போட்டிருக்கும் டிசைனுக்கு ஏற்ப விட்டு, பெரிய தூரிகையால் சமனப்படுத்தினால் சிறிது நேரத்தில் அது உலர்ந்து கெட்டியாகிவிடும். அது உலர்ந்ததும் அதன் மேல் தண்ணீர் விட்டால் நீருக்கடியில் கோலம் அழகாகப் பளிரிடும்!

### நீருக்குள் மாக்கோலம்

நமக்கு வேண்டிய அளவு மைதா மாவை எடுத்துத் தேவையான ரங்கோலி வர்ணப் பொடியைக் கலந்து நீர் விட்டுப் பசை போல் செய்து கொள்ள வேண்டும்.

பித்தளை பொட்டுத் தாம்பாளத்தை எடுத்து அதில் வேண்டிய கோலத்தை வரைந்து கொண்டு அதில் கையால் இந்த மைதா மாவு கலவையைத் தேவையான டிசைனில் நிரப்ப வேண்டும். கோலம் முழுதும் இவ்வாறு செய்ததும் ஒரு முழு இரவு அதனை அப்படியே உலர வைத்துவிட வேண்டும். மறுநாள் லேசாக நீரை அதில் விடவேண்டும். உலர்ந்த மைதா மாவு கலவை நீரில் கரையாது. அசக்கா இருந்தால் நீருக்குள் கோலம் பிரமாதமாயிருக்கும்.



ஜெர்மானியர் உருவாக்கியுள்ள கோலப் புத்தகத்தை ஸ்பென்ஸர் ஹார்மனி மானேஜர் சத்யா திருமதி கமலா குமாருக்குக் காட்டுகிறார்.



# பாசமா தியாகமா?

வசுமதி ராமசாமி



சென்னையில் அந்த நெருக்கடியான பதினெட்டாம் நம்பர் பெரிய வீட்டுக்கு அத்தை வீடு என்றால்தான் அந்த வட்டாரத்துக்குத் தெரியும். வாசல் பக்கம் நீண்ட அறை. பின் தெரு எட்டும்வரை நாலு கட்டுகள். நடு நடுவில் சின்ன முற்றம். குழாய்த்தண்ணீர் கொட்டும் அந்த வீட்டிலே எட்டுக் குடும்பங்கள் இருந்தன. அதிகாலை நாலுமணிக்கே அந்த வீட்டில் கலகலப்பு ஏற்பட்டு விடும். விளக்குகள் எரியத் தொடங்கும். குழாய்ச் சண்டை இல்லை. குளியலுக்குத் தாராளமாய்த் தண்ணீர் பிடிப்பது அந்த வீட்டிலேதான் பார்க்கலாம். ஐந்து நட்சத்திர ஹோட்டலில் குளிப்பதைவிட அந்த வீட்டுக்காரர்கள் வசதியாகக் குளிப்பார்கள்.

''அத்தையம்மா... லச்சுமிம்மா! உன்னைக் கண்டுக்கினு போக வந்தேன்.'' — ஒரு குரல்.

உயரமான, கம்பீரமான தோற்றம். கையில் ஜெபமாலை; விபூதிப் பட்டை. ஒரு கம்பளிப் போர்வை. குரலில் கரகரப்பு. முன்னறை விசுப் பலகையிலே உட்கார்ந்து கொண்டு அத்தை அந்த வீட்டை முழுவதும் நோட்டம் பார்த்துக் கொள்வாள்.

''என்னைக் கண்டுக்கினு என்னவாம்?''

''அத்தேம்மா! மாடு நீ துட்டுக் குடுக் காட்டி பட்டினிதான். இன்னிக்கு எட்டாம் தேதி. சீட்டுக்காரன் வேறே மென்னியைப் பிடிப்பான்!''

''இதே வேலையாப் போச்சு! இன்னும் இரண்டு நாளையிலேபாரு. நான்என் புள்ளே வாங்கியிருக்கும் புது பங்களாவுக்குப் போறேன். நீங்கள்ளாம் எப்படியாவது ஒழியுங்க. துட்டைக் கொட்டிக் கொடுத்துத் தண்ணிப் பாலே இந்த வருஷம் முழுதும் வாங்கியாச்சு!''

''அப்படிச் சொல்லாதேம்மா. துட்டைப் பாக்காதே. நான் வர்ற முதல் தேதி கொடுக்கிறேன். எல்லா ஊட்டேயும் வாங்கிட்டேன். கால் கொளுசு செயின் எல்லாம் அடகு வைச்சுட்டேன்.''

''உன் நச்சுக்காகக் கொடுக்கலே. மாடு வாயில்லா சீவன். வாங்கிட்டுப் போ. ஆச்சு. என் பிள்ளை பெரிய பங்களா வாங்கிட்டான். மாட்டுத் தொழுவம் கூட இருக்காம். வல்லம் பசு வாங்கிக் கட்டிக்கிறேன். பால்காரன் பிடுங்கல் இல்லை'' என்று கூறி அனுப்பினள்.

பிறகு, அங்கே வந்த மணியிடம் ''மணி, உங்க ஆபீஸிலே ராமனைக் கண்டாச்சொல்லு! என் பிள்ளை சந்துரு சிங்கப்பூரிலிருந்து ரிடையர் ஆகி வந்துட்டான், அடையாறிலே பெரிய பங்களா வாங்கியிருக்கான்னு. என்னவோ பாங்கி வேலையிலே சிங்கப்பூர் மாத்திப் போகச்சே அழுகை வந்தது. இப்பப் பாரு, லட்சக் கணக்காச் சம்பாதிச்சுச் சேர்த்துக் கொண்டு வந்துட்டான். அதோட குழந்தை வந்த சுருக்கிலே வீடும் வாங்கிட்டான்!'' என்றாள்.

''அத்தே! பெரிய தோட்டமா?''

''அதென்ன அப்படிக் கேக்கறே! வில்வ மரம், மாமரம், செம்பருத்திப் பூ தென்னை சொல்லி முடியாதப்பா. நல்ல காற்று.

பிள்ளை வீடு வாங்கின பெருமையை அவன் அப்பா இருந்து பாக்கலேயே!''

''அத்தே! பழசை நினைச்சு வருத்தப் படாதீங்க. கண்ணைத் தொடச்சுக்குங்க.''

''பழசுன்னு சொல்லாதே. நான் இந்த வீட்டுக்குக் குடித்தனம் வரச்சே பதினாறு வயசு. எத்தனை அழகா பொம்மை மாதிரி இருப்பேன். அவர் கைராசிக்கார டாக்டர். என்ன வருமானம் தெரியுமா? டாக்டர் வைத்தியநாதன்னு அழுத பிள்ளையும் வாய் மூடும். நான் வர்றப்போ திரட்டுப் பாலும் தேன்குழலும் எங்கம்மா கூடையில் வைத்து மாப்பிள்ளை டாக்டராச்சேன்னு வெள்ளைத் துணியைப் போட்டுக் கட்டிக் கொடுத்தா. பின் பக்கமெல்லாம் அவர்தான் கட்டினார். இந்த விசுப் பலகையிலே எத்தனை ஏழை நோயாளிங்க உட்கார்ந்திருப்பாங்க. காசில்லாமே வைத்தியம் செய்வார். என் பெண்கள் பிள்ளை எல்லாம் முன்னுக்கு வந்துட்டா. எனக்கு என்ன குறைச்சல்? டாக்டர் பக்கவாதம் வந்து மூன்று வருஷம் படுத்துவிட்டார். அதிலேதான் சருக்கல். அவர் நூறு வயசு நோயாக இருந்தால் கூட நான் செய்வேன். மணி! ராமனைப் பார்த்தால் சொல்லு. புது வீட்டிலே கிணறு கூட இருக்கு. தண்ணீர் கரும்புதான். அவன் அம்மாவை என்னோடு வந்து நாலு நாளைக்கு இருக்கச் சொல்லு. மறக்காமச் சொல்லு!'' என்று அத்தை சொல்லிவிட்டு, ''ஓதுவாரா? ஏம்பா நேரமாச்சே கோவிலுக்குப் போகலியா?'' என்றும் கேட்டாள்.

''அத்தே! இன்னும் இரண்டு நாளைக் கப்புறம் எங்களுக்கு இந்த வீட்டிலே யார் இருக்காங்க? நல்லதுக்கும் பொல்லாததுக்கும் நீங்கதான்னு அப்பா சொன்னார் அத்தே. நான் என்ன செய்யும் கோள் என்ன செய் யுமுன்னு சொல்வாங்க! நீங்க நாளைக்கே நல்ல நாளிலே போகணுமா அத்தே? பின்னாலே போகலாமே? என் பையனுக்குப் பிறந்த நாள் வர்றது. அப்புறம் போகலாமே!'' என்று கோரினான் ஓதுவார்.

''என் பிள்ளை வீடு வாங்கி நல்ல நாள் பார்த்துக் குடி போறான். விஷு நாக்கிலே நாளைக்கே போகணுமான்னு சொல்றே. போ. போ. கோவில்லே போய்த் தேவாரம் பாடு'' என்று ஓதுவாரை அனுப்பினாள்; பிறகு டிரைவர் வேலை பார்த்த ஒரு குடித்தனக்காரனி

பெண்களின் அழகு அவர்களுடைய தூய நடத்தையில் தான் - நகைகளில் அல்ல!

—காந்திஜி





பெண் நன்றாக இருக்கும் இடம்தான் செழிப்பாக இருக்கும். ஒரு நாட்டின் நலன் அந்நாட்டு பெண்களின் நிலையைப் பொறுத்ததே!

-திரு. வி. க.

டம் ''நேற்று ராவெல்லாம் இருமினே. இன்னிக்குக் கிளம்பறே. கார் ஒட்டுவது சூடு தானே. இந்தா இந்த மாத்திரையைப் போட்டுக்கோ. எப்பவும் நான் இதைக் கையிலே வைச்சுப்பேன். டாக்டர் இருந்தாரே எத்தனை பேருக்கு மருந்து கொடுப்பார் தெரியுமா? அவருக்கு ஒரு டாக்டருமே நல்ல மருந்து கொடுத்துப் பிழைக்க வைக்கலே. அந்தப் புது வீட்டிலே தும்பை, துளசி, விஷ்ணு கிராந்தி எல்லாம் இருக்கும். கஷாயம் போட்டுக் கொண்டு வந்து தரேன். ஏன் நீயே வீட்டைப் பார்க்க வரப் போறே. அப்பக் கொடுக்கிறேனே!'' என்றாள்.

''அத்தே! முதல்லே புது வீட்டிலே மருந்தா கொடுப்பீங்க! ஸ்வீட்டுன்னு கொடுக்கணும்?''

''இந்தா, பார்வதி! எங்கே போறே? இன்னிக்குப் பள்ளிக்கூடம் லீவுதானே? உன் தோழியா இவங்களெல்லாம்?''

''இந்தக் கிழத்துக்கென்ன கவலே? நாமெல்லாம் எங்கே போனால் என்ன? நியூசென்ஸ். நீங்களெல்லாம் அதை லட்சியம் பண்ணுறீங்க'' என்று கூறி யுவதிகள் நகர்ந்தார்கள்.

## வகிட்டில் குங்குமம்

அசோக வனத்திலிருந்த சீதையைக் கண்டு எல்லா விவரங்களையும் கூறி முடித்த ஹனுமார், ''அன்னை வகிட்டில் செந்தூரம் வைத்துக் கொள்கிறாரே எதற்கு?'' என நினைத்தார். அதனை சீதாபிராட்டியிடம் கேட்கவும் செய்தார். அதற்கு அன்னை, ''ஸ்ரீ ராமபிரானின் ஆயுள் விருத்திக்காக வைத்துக் கொள்கிறேன்'' என்றார். உடனே ஹனுமார் தாவிச் சென்று செந்தூரத்தைத் தேடியெடுத்து உடல் பூராவும் பூசிக்கொண்டு ''அன்னையே, இதைப்பாருங்கள், நீங்கள் சிறிதளவே வைத்துக் கொள்கிறீர்கள். நான் உடல் பூராவும் செந்தூரத்தைப் பூசிக் கொண்டு விட்டேன். இது என் பிரானின் ஆயுளை எவ்வளவு விருத்தி செய்யும்!'' என்றார்.

அன்னை சிரித்தார். ''எந்த பெண் வகிட்டில் செந்தூரம் வைத்துக் கொள்கிறாளோ அவள் கணவர் ஆயுள் வளரும். அதற்காக நீ இப்படி செய்தால் என்ன அர்த்தம்?'' எனக் கூறினார். தொடர்ந்து,'' உன் ஆழ்ந்த அன்புக்காக உனது இச் செயலும் முக்கியத்துவம் பெறட்டும்'' என்றார். அதனால்தான் கோயிலில் ஹனுமாருக்குச் செந்தூரம் பூசப்படுகிறது.

—பிரவசனத்தில் சொல்லக்கேட்டவர்
திருமதி வத்சலா ராமச்சந்திரன்




அடுத்த கணம் வேலு தென்பட்டபோது, ''வேலு! போன மாசம் இரண்டு நாளிலே தர்றேன்னு இருபது ரூபாய் வாங்கினே. ஒரு மாசத்துக்கு மேலாச்சு. எப்ப கொடுக்கிறது? இன்னிக்கு உங்க ஆபீஸ்லே சம்பளம் போடுவா. கையோடு கொண்டு கொடுக்காவிட்டால் நான் பொல்லாதவளாகி விடுவேன்!'' என்று இடித்துரைத்தாள்.

''அத்தே! அத்தே! அம்மா வலியிலே துடிக்கிறாங்க. வாங்க வாங்க!'' என்று உள்ளேயிருந்து குரல் கேட்கிறது.

அத்தை வேகமாக நடந்து கடைசிக் கட்டுக்குப் போகிறாள்.

''வள்ளி! என்னுச்சு? மாசம் ஆயிடுத்தா? அடிப்பாவிப் பொண்ணே! நான்தான் குத்துக் கல்லு மாதிரி இருக்கேனே, சொல்லக் கூடாதா? கிளம்பு, கிளம்பு. உன் புருஷன் ராவெல்லாம் இருமினான். போகச்சே கூட நீ கஷ்டப்படறேன்னு சொல்லலியே?''

''அத்தை! என்னைப் பிடிச்சுக்குங்க... தண்ணி கொடுங்க.''

''வா, பக்கத்திலேதான் ஆஸ்பத்திரி. கொண்டு விடறேன். என் கையாலே கொண்டு விட்டா ஆண்பிள்ளைதான் பொறக்கும். டாக்டர் இப்படி எத்தனை பேருக்கு உதவி செஞ்சாரு. அவர் இருந்தால் எத்தனை பட்டம் பதவி எல்லாம் வந்திருக்கும்? என் பிள்ளை தன் அப்பா படம் பெரிசா எடுத்துச் செஞ்சிருக்கான். புது வீட்டு முகப்பிலே மாட்டி மாலை போடப்போறான். ராஜா மாதிரி இருப்பாரு!''

''அத்தே! வாங்க. எனக்கு வலி தாளலே. அப்புறம் பேசுங்க.''

அத்தையின் பேச்சுக்கு முற்றுப்புள்ளி விழுந்தது.

''காலையிலே ஐந்து மணிக்கு வருகிறேன். புது வீட்டுக்குப் போக நீ தயாரா இரும்மா'' என்று அவளது அருமைப் பிள்ளை வந்து அழைத்து விட்டான்.

வழக்கத்தை விட முந்தியே அந்த வீட்டில் கலகலப்பு. அத்தை புது வீட்டுக்குப் போவதால் எல்லோருக்கும் பரபரப்பு. எல்லாக் குடும்பமும் குழந்தை குஞ்சுகளோடு அத்தையை வழியனுப்ப வாசலில் குவிந்தார்கள்.

சந்துரு காருடன் வந்து அத்தையை அழைத்துப் போக வந்தான்.

அத்தை விசுப் பலகையில் சாவதானமாக உட்கார்ந்திருந்ததைப் பார்த்துச் சந்துருவுக்குக் கலக்கம் ஏற்பட்டது!

''அம்மா! நேரமாச்சே, கிளம்பு கிளம்பு!''

''எங்கே கிளம்பணும்?''

''நேற்றே நானும் சரஸ்வதியும் வந்து காலையில் உன்னைத் தயாராக இருக்கச் சொன்னோமே?''

''புது வீட்டுக்கா?''

''என்ன புதுசாக் கேக்கறே?''

''நான் இங்கேயே இருக்கேம்பா!'' அத்தை அழுத்தமாக உட்கார்ந்துகொண்டாள்.

''என்ன, என்ன?'' என்று நிறையக் குரல்கள் திகைத்துக் கேட்டன.

''சந்துரு! உங்கப்பா இருந்த இந்த வீட்டிலேயே என் காலத்தைக் கழிச்சுடறேன்.''

''உனக்காகத்தானே அம்மா வீடு வாங்கி இன்று குடிபுக ஏற்பாடு செய்தேன். நீ வரலேன்னா நாங்களும் போகலே!'' சந்துரு முகத்தைக் கவிழ்த்துக் கொண்டான். கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து உடைந்தது. அதனால் அவன் மனைவி முகத்தைப் பார்க்கவில்லை. அவள் முறைப்பதை அவனால் தாங்கி இருக்க முடியாது.

''சமயத்தில் ஏன் இப்படி அடம் பிடிக்கிறேள்?'' — மருமகளிடமிருந்து சுடுகணை பிறந்தது.

மருமகள் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள்.

''இல்லேப்பா. இங்குள்ள குடும்பங்களோடு சேர்ந்து கஷ்டம் சுகம் எல்லாவற்றிலும் பங்கு கொண்டேன்.''

''அம்மா, அறுபது வருஷங்களா இந்த வீட்டிலே எப்படி இருந்தேள்? இந்தச் சந்து நடுவிலே எருமை மாடு எச்சில் இலையை மேயறது!'' என்றான் சந்துரு எக்காளமாக.

''மாடு எச்சில் இலையைத் தின்னுட்டா சுவரிலே ஒட்டிய காகிதத்தைத் தின்கிறது. என்னவோ அவர் இருந்த வீடு. நான் புகுந்த வீடு. எனக்குச் சொர்க்கமா இருக்கு'' என்று மருமகளுக்கு அத்தை பதில் சொன்னாளே தவிர உள்ளுக்குள் வேதனை இருக்கத்தான் செய்தது.

''சந்துரு! இந்த வீட்டுக்கு வெள்ளை அடிச்சு, முன் பக்கத்து அறையை உங்கப்பா நினைவாக யாராவது டாக்டருக்கு வாடகைக்கு விட்டால் இங்கே நிறைய ஏழைகள் வந்து வைத்தியம் செஞ்சுப்பா.''

''என்னம்மா அர்த்தமில்லாம சொல்றே? இந்த வீட்டை எந்த டாக்டர் எடுத்துப்பான்? இதை வித்துட வேண்டியதுதான். நல்ல விலே வரட்டும். காத்து பெருக்குக்கூட இல்லே. வசவசவென்று எத்தனை குடும்பம்!' நம்ப வாங்கியிருப்பதைப் பார்த்துட்டு இந்த வீட்டைப் பார்த்தா எவ்வளவு மோசமா இருக்குன்னு தெரியறது. அங்கங்கே சாக்கடை.., கரிப் புகை வேறு!''

''பாட்டி! இந்த வீடு நன்னாவேயில்லே அடையாறு வீட்டிலே குழந்தைகளுக்குன்னு அறை இருக்கு. தோட்டத்திலே சருக்கு மரம் இருக்கு. இங்கே என்ன இருக்கு?''

''அம்மா! இந்த வீட்டிலே நீ ஒரு நாள் கூட இருக்கக் கூடாது. சுகாதாரமே இல்லே. வயசுக் காலத்திலே என்னோட இருக்க வேண்டாமா?'' என்று கட்டாயப்படுத்தினான் சந்துரு.

''எதுக்கு அப்படிச் சொல்றேன்? அம்மாவுக்கு வயசுக்கு மேல் இடம் இருக்கிறது!''

அத்தை காதில் ஒன்றும் விழவில்லை.

''இந்த வீட்டின் சூழ்நிலே நான் இருக்கேன். முடிந்தபோது உன் புது வீட்டுக்கு வர்றேன்.''

''அம்மா! உன் பிள்ளையோடு இருக்க நீ ஆசைப்படலேயா?''



## ஒரிஸ்ஸாவில் பெண்கள்

ஒரிஸ்ஸாவில் பெண்கள் மற்றவர்களை வணங்கும் பொழுது இரு கைகளையும் கூப்பி உடம்பை வளைத்துக் குனிவார்கள். அடிக்கடி ''ஆக்ஞா'' ''ஆக்ஞா'' என்பார்கள். ''தங்கள் ஆக்ஞைப்படி'' என்று அர்த்தம். அவ்வளவு பயம்.

ஒரியா பெண்களின் நடை உடை பாவனைகள் ரொம்ப எளிமையாக இருக்கும். சந்தன நிறம், கத்தரிப்பூ நிறம், ஆப்பிள் நிறப் புடவைகளை விரும்புகிறார்கள். சுங்கிடிப் புடவைகள் போன்ற Tie and dye புடவைகள் அங்கு பிரசித்தம். கல் நகைகளுக்கு அவ்வளவு மதிப்பில்லை. சாதாரண ஜனங்கள் வெள்ளியாலான நகைகளையும், சங்கு வளையல்களையும் விரும்பி அணிகின்றனர். FILI GREE என்ற வெள்ளி இழைகளினாலான வேலைப்பாடு நிறைந்த நகைகளுக்கு ஒரிஸ்ஸா பெயர் பெற்றது.

ஒரியா பெண்கள் விரும்பிப் பங்கு கொள்ளும் விசேஷங்களில் முக்கியமானது துர்கா பூஜை. (நம்மூர் நவராத்திரி சமயம்) தெருவுக்குத் தெரு துர்கா, சரஸ்வதி, லக்ஷ்மி, கணேசன், கார்த்திகேயன் இவர்கள் பிரதிமைகளை (களிமண்ணினால் செய்து வண்ணம் பூசியவை) அலங்கரித்தும் பக்தி சிரத்தையுடன் பூஜித்தும் பாடுவார்கள்.

வருடத்திற்கு ஒரு முறை, ''குமார் பூர்ணிமா'' கொண்டாடுவார்கள். அன்று இரவில் தங்கள் சகோதரர்களுக்கு அலங்காரம் செய்து சந்தனம் பூசித் திலகமிட்டுப் பெருமை படுத்துவார்கள். மாலைநேரங்களில் பெண்கள் வீட்டு வாசல் படியில் விளக்கு ஏற்றி வைத்து லக்ஷ்மியை வரவேற்கும் வகையில் சங்கு ஊதுவார்கள், லக்ஷ்மியின் வாகனமான ஆந்தைபோல் சப்தமிட்டும் வரவேற்பார்கள்! —ஜெஸ்ரேஸ்வரி தீனதயாளன்

''யார் சொன்னா சந்துரு! உங்கப்பா வாழ்ந்த இந்த வீடு எனக்குச் சொர்க்கம். இங்கே இருக்கிற எட்டுக் குடும்பம் என் குழந்தைகள். நீ ஒன்பதாவது பிள்ளை. எனக்கு அவர்கள் எத்தனையோ கஷ்டங்களிலே ஆதரவாக இருந்தாங்க. நான் அவாளுக்கெல்லாம் பெரியவளாக இருக்க வேண்டாமா?''

''நீ புது வீட்டுக்கு வரலேயா பாட்டி... இதுதான் உன் முடிவா?''

பேரப் பிள்ளையின் குரல் அந்தத் திடசித்தத்தைக் கொஞ்சம் அசைத்து விட்டது. ஆனாலும் என்ன?

''குழந்தைகளா! இதுதான் தீர்மானமான முடிவு.''

அந்த வீட்டில் உள்ள அத்தனை பேர்கள் கண்களிலும் கண்ணீர் பொங்கி வழிந்தது. இது பாசமா? அல்லது தியாகமா?

---

கோபமுற்ற பெண் கலங்கிய குளத்தைப் போன்றவள் - அர்த்தம், தெளிவு, அழகு கிடையாது. —ஷேக்ஸ்பியர்



புரிசைவான் உலகில் பூவுலகு எல்லாம்
புண்ணிய உலகமாய்ப் பொலிந்தே
கரிசெலாம் தவிர்ந்து களிப்பெலாம் அடைந்து
கருத்தொரு வாழவும் கருத்தில்
துரிசெலாம் தவிர்க்கும் சுத்தசன் மார்க்கம்
துலங்கவும் திருவருட் சோதிப்
பரிசெலாம் பெற்றேன் எனக்குஇது போதும்
பண்ணிய தவம்பலித் ததுவே!

— திருஅருட்பா



# இளைய தலைமுறையின் இனிய உரையாடல்

※ இடமிருந்து வலமாகக் குமாரி உஷா, குமாரி ஷோபனா, குயிலி ராஜேஸ்வரி, குமாரி சுஜாதா.

**[ஷோபனா, சுஜாதா, உஷா மூவரும் குயிலி ராஜேசுவரி வீட்டில் சந்திக்கின்றனர்.]**

ஷோபனா: ஹாய்! சுஜா, என்ன ஃபாஷன் பரேடிலேயிருந்து வரியா? எப்படி இருந்தது?

சுஜாதா: பிரமாதம். பதான்சூட்தான் பாப்புலர். முக்கியமா காலேஜ் ஸ்டூடன்ட்ஸுக்கு இதுமேலே ஒரு தனிப் பிரியம்.

உஷா: பதான், சினிமாவிலேயிருந்து காப்பியா? இல்லே ஒரிஜினலா?

சுஜாதா: இதுக்கு இன்னொரு பெயர் நேரு டிரஸ். பெல்விசா டைஜாமா, முழங்காலுக்கு மேலே வர ஜிப்பா. இவைதான் இந்த ஸூட். அதோடே இதை அணிந்து பார்த்தால் ரொம்ப அழகா இருக்கு. உடம்புலே ஒரு பகுதி கூடத் தெரியறதில்லே.

உஷா: நீ ஆயிரம்தான் சொன்னாலும் நம்ம புடவையில் இருக்கிற கிளாமர் வேறு எதிலேயும் இல்லேன்னுதான் சொல்லுவேன்.

ஷோபனா: ஒரு ஃபாரின் ஸ்டூடண்டுக்கு நான் புடவை கட்டின சம்பவம் ஞாபகத்துக்கு வரது. என் ஒவ்வொரு அசைவையும் அவ கூர்ந்து கவனிச்சா. அதைவிடப் புடவை சுத்தும்போது, அவளும் சேர்ந்து சுத்தியதை நினைச்சா சிரிப்பா வரது.

உஷா: என்னதான் சொல்லு. புடவை கட்டியிருந்தா அப்போ ஒரு தனி மரியாதைதான் எந்த ஆண் மகனும் பெண்ணுக்குத் தருகிறான்.

ஷோபனா: அதெல்லாம் ஒன்றுமில்லே. எந்த டிரெஸ்ஸாயிருந்தாலும் பீக் அவர்ஸ்ல பஸ்ஸில் ஆண்களுக்குப்பொம்பளைங்க மேலே இடிச்சுகிட்டுப் போறது ஒரு ஸில்லி என்டர்டெயின்மெண்ட் ஆயிடுச்சு.

உஷா: இதுக்கு காலேஜ் ராகிங்கே பரவாயில்லே போலே இருக்கே!

ஷோபனா: வேதனையா ஆரம்பிச்ச ராகிங் நன்மையா முடிஞ்ச ஒரு சம்பவம் சொல்லட்டா? சிறுகதை மாதிரி இருக்கும்! நானும் என் ஃபிரெண்ட் ஒருத்தியும் ஜூனியர்களாக இருந்தபோது, ஒரு ஸீனியர் மாணவி, என் தோழியைப் பார்த்துக் கிண்டலா, 'நானும் என் அண்ணாவும் உன்னைப் பெண் பார்க்க வரப் போறோம். அதனாலேஇன்னிதேதியிலேயிருந்து இரண்டு





மாசத்துக்கு காலேஜ் தவிர வேறு எங்கும் போகக் கூடாது'ன்னு சொன்னு. அவளும் ராகிங்குக்குப் பயந்து வெளியே எங்கும் போகவில்லே. அதோடு எப்படியோ என் ஃப்ரண்டு ஜாதகம், அவங்க வீட்டுக்குப் போய் நிஜமாகவே கல்யாணமும் ஏற்பாடாகி நடந்துவிட்டது! இப்போ ஸீனியர் — ஜூனியர் பிரச்னே போய், அண்ணு அண்ணி பிரச்னே முளேச்சிடுத்து!

சுஜாதா: என்னேக் கேட்டா கோ-எஜுகேஷன் அவசியம்னுதான் சொல்லுவேன். இதிலே கெட்டதை விட நல்ல அம்சங்கள் தான் அதிகமா இருக்கு. படிப்பிலே போட்டி இருக்கு. தவிர எல்லோரோடயும் எப்படிப் பழகணும்னு தெரியறது. உஷா! ஸெக்ஸ் எஜுகேஷன் பற்றி நீ என்ன நினேக்கிறே?

உஷா: அதையும் ஒரு விஞ்ஞானப் பிரிவுப் பாடமாகத் தெளிவாகக்கற்றுத் தருவதிலே தப்பு இல்லே. காலேஜிலே சொல்லித் தரலாம். தெரிஞ்சுக்காமலே இருந்து பெற்றோரிடம் கேட்கவும் கூச்சப்பட்டுக் கடைசியிலே கல்யாணம் முடிஞ்சதும் சிலருக்குப் பயம் வந்துடறது. சில சமயம் பலன் விபரீதமாயிடறது.

ஷோபனு: எஜுகேஷனே சரியா அமையலே; நீ ஸெக்ஸ் எஜுகேஷனுக்குப் போயிட்டே!

சுஜாதா: வாஸ்தவம்தான். என்ன படிச்சு என்ன பிரயோஜனம்? நாம படிச்சதுக்கு ஏத்த மாதிரியா வேலே கிடைக்குது? நம் பிற்கால வாழ்க்கைக்கு ரொம்பத் தேவையான படிப்பு வகைகள் இங்கே இல்லே. நம்ம பாடத் திட்டத்தையே மாற்றி அமைச்சாகணும். எந்தப் பெண்ணுக்கும் கல்யாணம் ஆன பிறகு தேவையான அம்சங்களேக் கல்லூரியில் சொல்லித் தரணும்.

ஷோபனு: கல்யாணம்ன உடனே வரதட்சணே வியாதிதான் பயமுறுத்தறது. இன்றைக்கும் டௌரி வாங்கறதை ஒரு ப்ரஸ்டீஜ் பலர் நினேக்கிறுங்க.

உஷா: நடந்த சம்பவம் ஒன்று சொல்றேன். எனக்குத் தெரிந்த ஒருத்தருக்கு ஐந்து பெண்கள். மூத்தவளுக்கு ஒரு என்ஜினீயர் மாப்பிள்ளே. நிறைய வரதட்சிணே. அடுத்தடுத்த பெண்களுக்கு அவ்வளவு தர முடியாம படிப்படியா வரதட்சிணே குறைய மாப்பிள்ளேயின் ஸ்டேட்டஸும் சம்பாத்தியமும் குறைந்தது. கடைசி மகளுக்கு ஒரு சமையற்காரரைத்தான் அவரால் மணமகனுகத் தேர்ந்தெடுக்க முடிந்தது. அந்தப் பெண் சந்தோஷமாகத்தான் இருக்கா. அது வேறு விஷயம்.

ஷோபனு: ஒரு பெண்ணுக்கு டான்ஸோ, பாட்டோ தெரிஞ்சிருந்தாலும் மாமனுர் வீட்டிலே அவ திறமைக்கு மதிப்பளித்து அதை வளர்க்க உதவ மாட்டாங்க. பெண் பார்க்க வரச்சே பாடத் தெரியுமான்னு கேட்பதோடு சரி. கல்யாணமான பின் அரை மணி பாட உட்காரட்டும், 'வேலே அம்பாரமாக் குவிஞ்சு கிடக்கு. பாட உட்கார்ந்துட்டியா' என்பாள் மாமியார்.

சுஜாதா: ரொம்ப கரெக்ட். கோயிலுக்குப் போகும்போதுகூட, நம்மைப் போல யங்கர் ஜெனரேஷன் பக்தியா சாமியை வணங்கறேம். ஆனு பெரியவங்க அங்கு தான் ஊர்க் கதையை எல்லாம் பேசறுங்க.

உஷா: கதை என்றதும் தமிழ்ப் பத்திரிகைங்க ஞாபகம் வரது எனக்கு. வர வர ரொம்ப மோசமா ஆயிடுத்து. இல்லையா சுஜா? இளேஞர்கள் இப்படித்தான் விரும்பறுங்கன்னு சொல்லி இவங்க போடற கதைகள் ரொம்ப ஆபாசமா இருக்கு. நம்ப பெயரைச் சொல்லி அரசியல்வாதிங்க மாதிரி இவங்களும் பணம் பண்றுங்க.

ஷோபனு: கல்கியோட கதைகள் இன்றைக்கும் மறுபடியும் மறுபடியும் படிக்கணும் போல இருக்கே. படிக்க விறுவிறுப்பாக, கொஞ்சம் கூட விரசம் இல்லாம பிளேஸண்டா இல்லேயா? பாப்புலாரிட்டிக்காக இப்போது ஆபாசமா எழுதறவங்க அவரை விட என்ன பெரிசா பெயர் சம்பாதிச்சுட்டாங்க?

உஷா: கல்கியோட, இன்றைக்குள்ள எழுத்தாளர்களே நீ ஒப்பிடறதே தப்புன்னு எனக்குத் தோணுது. அவர் மாதிரி இவங்களால் எழுத முடியும்னு ஆயிட்டா அப்புறம் கல்கிக்கு என்ன மதிப்பு? அவர் மாதிரி ஆற்றல் இல்லாததாலேதான் இன்றைய எழுத்தாளர்களில் சிலர் ஏதேதோ ஆபாசங்களே எழுதிக் குறுக்கு வழியில் பிரபலமடையப் பார்க்கிறுங்க. நல்ல எழுத்தாளர்களும் இல்லாம போகலே. நாம தேர்ந்தெடுத்துப் படிக்கணும். சமுதாயத்திலே உள்ள பிரச்னேகளே அலசற மாதிரி கதைகள் எழுதணுமே தவிர சமுதாயத்தைக் கெடுக்கிற மாதிரி எழுதக் கூடாது என்பதை எழுத்தாளர்கள் புரிஞ்சுக்கிட்டாப் பிரச்னேயே இல்லே.

சுஜாதா: சமுதாயப் பிரச்னே இருக்கட்டும். இப்ப எனக்கு நேரப் பிரச்னே. சொன்ன டயத்துக்கு வீடு திரும்பலேன்னு அம்மா கவலேப்படுவா. நான் வரட்டுமா?

[நன்றிகூறிக் குயிலி அனேவருக்கும் விடை கொடுத்து அனுப்புகிருர்.]

உரையாடல் தொகுப்பு: "சிக்கி"

---

பழம் பெரும் நாவலாசிரியையான வை. மு. கோதைநாயகி அவர்கள் 'ஜகன் மோகினி' என்ற பத்திரிகையை 32 வருடங்கள் நடத்தி வந்தார். இவர் ஒரு முறை கூட பள்ளிக் கூடம் போனதில்லே.

—கே. அகிலா



# வேண்டாம் கருச்சிதைவு!



"சட்டம் கருச் சிதைவை அனுமதிக்கிறது. ஆனால் கருச் சிதைவு செய்து கொண்டால் பெண்ணின் உடல்நிலைக்கு எந்தக் கெடுதலும் வராமல் இருக்குமா" என பிரபல டாக்டர் திருமதி ருக்மிணி சௌரி ராஜனைக் கேட்டபோது:

"என்னைக் கேட்டால் கருச் சிதைவே செய்து கொள்ளக் கூடாது என்பேன். குழந்தை வேண்டாம் என்கிறவர்கள் முன்னுடியே பாதுகாப்பாக இருப்பதுதான் நல்லது. கருச் சிதைவு சட்ட விரோதம் என்றால் திருட்டுத்தனமாக, விஷயம் தெரியாதவர்களிடம் வைத்தியத்துக்குப் போய் உயிரை மாய்த்துக் கொண்டு விடுகிறார்கள். அதனால் தான் சட்டம் அனுமதி கொடுத்தது. மூன்று குழந்தைகளுக்கு மேல் இருந்தாலோ இதயம் பலவீனமுற்றிருந்தாலோ அல்லது - பலவந்தப்படுத்தி விட்டதால் கர்ப்பமாகி விட்டாலோ கருச் சிதைவு செய்து கொள்ள அனுமதி உண்டு. பொதுவாக ஐந்து மாதங்களுக்கு மேலாகி விட்டால் கருச் சிதைவு செய்வது நல்லதல்ல. கருச் சிதைவு செய்து கொள்ள வேண்டும் என்று நினைப்பவர்கள் எவ்வளவு சீக்கிரம் வருகிறார்களோ அவ்வளவு நல்லது. வருகிற நோயாளிகள் தங்களைப் பற்றிய உண்மைகளை மறைக்கிறார்கள். இதுமிகவும் தவறு. அடிக்கடி கருச் சிதைவு செய்து கொள்வதால் கருப்பை மிகவும் பழுதடைந்து விடும். திருமணத்துக்கு முன் கருவுற்று அதை அழித்துவிடும் பெண்கள் படிப்படியாக அதிகரித்து வருகிறார்கள். இதைச் சொல்ல வருத்தமாக இருக்கிறது. இதற்கு முக்கிய காரணம் பத்திரிகைகளில் வரும் கதைகள்தான் என்பது என் எண்ணம். அதையெல்லாம் படித்தால் அசட்டுத் துணிச்சல் கூட வந்து விடுகிறது. எல்லோரும் இப்படித்தான் என்ற நினைப்பும், இளைஞர், யுவதிகள் உள்ளத்தில் ஏற்பட்டு விடுகிறது."

"லூப் அணிவது பற்றி என்ன நினைக்கிறீர்கள் டாக்டர்?"

"திருமணமான பெண்கள் சில சமயம் கர்ப்பம் ஏற்படாமல் இருக்க வேண்டும் என்றால் லூப் போட்டுக் கொள்ளலாம். மாத்திரைகள் சாப்பிடலாம். சிலருக்கு மாத்திரை சாப்பிடுவதால் மாத விலக்கு மிகவும் குறைவாகவும், லேசாகவும் இருப்பதுண்டு. இன்னும் சிலருக்கு வேறு மாதிரி கோளாறும் ஏற்படலாம். திருமணமான புதிதில், கர்ப்பம் சீக்கிரம் வேண்டாம் என நினைத்து மாத்திரை சாப்பிட்டுத் தள்ளுவது அவ்வளவு நல்லதல்ல. லூப் போட்டுக் கொண்டாலும் லூப் சரியாக இருக்கிறதா என அடிக்கடி பார்த்துக் கொள்வது அவசியம். சிலர் லூப் போட்டுக் கொண்டும் கர்ப்பமாகி விடுகிறார்கள். உடனடியாக லூப் வெளியே வந்து விட்டதா



✕ புகைப்படம்: டாக்டர் ருக்மிணி சௌரிராஜன்

✕ சித்திரம் நன்றி: மாக்ஸ் முல்லர் பவன்

## இன்னிக்கி காபி பிரமாதம்!

பீபரி — 400 கிராம் (வாசனைக்கு)
பிளான்டேஷன் — 200 கிராம் (ருசிக்கு)
ரோபஸ்டா — 400 கிராம் (நிறத்திற்காகவும், திக்காக இருக்கவும்)
ஆக மொத்தம் 1000 கிராம் - 1 கிலோ

இந்த விகிதத்தில் கொட்டையை வாங்கி, ரோஸ்ட் செய்து கலந்து பொடி பண்ணிக் காப்பி போட்டுத்தான் பாருங்களேன். பிறகு விடவே மாட்டீர்கள் இந்த விகிதத்தை.

—குமுதா

என எக்ஸ்ரே எடுத்துப்பார்க்க வேண்டும். லூப் உள்ளே இருந்தால் குழந்தை உடல் ஊனமாகப் பிறக்க வாய்ப்பு உண்டு. லூப்புக்கு ஆயுள் மூன்று வருடம்தான். அதற்கேற்பப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும். இது போன்ற காரணங்களால் மாத்திரை விழுங்குவோரும், லூப் தரிப்போரும் அடிக்கடி டாக்டர் மேற்பார்வையில் இருந்து வர வேண்டும்.''

''கருத்தடை ஆபரேஷன் பற்றி உங்கள் கருத்து என்ன?''

''பெண்களை விட ஆண்கள் குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்துகொள்வது சுலபம். இதனால் வியாதி வருகிறது. உடல் பருக்கிறது என்று இருபாலாரும் சொல்வது வெறும் பிரமை.''

''கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் சில சமயம் ரத்தம் சேராததால் கருவுற்றால் சிக்கல் ஏற்படலாம் என்கிறார்களே?''

''என்னைக் கேட்டால் திருமணத்துக்கு ஜாதகம் பார்ப்பதைப் போல் மருத்துவ சான்றிதழ் பார்ப்பதும் அவசியம் என்று கூறுவேன். அப்படிப் பரிசோதிக்கும்போது எந்த ரத்தம் எந்த ரத்தத்தோடு சேரும் என்பதையும் தெளிவாகச் சொல்ல முடியும்.''

''சில தம்பதிகளுக்குக் குழந்தையே பிறக்க மாட்டேனென்கிறதே?''

''குழந்தை பிறக்கவில்லை என்றால் பரிசோதனைக்குக் கணவன், மனைவி இருவரும் வர வேண்டும். இரண்டு பேரில் யாரிடம் குறை இருந்தாலும் நிவர்த்தி செய்ய வழி உண்டு. பெண்களுக்கு 35 வயதுக்கு மேல் குழந்தை பிறப்பது நல்லதல்ல. சிலருக்குப் புத்தி வளராத அல்லது குறையுள்ள குழந்தைகள் பிறந்தால் மேற்கொண்டு கர்ப்பமாகாமல் செய்து கொள்வது நல்லது. ஆண்களின் உறுப்பில் புண் இருந்தாலும், இடுப்பிலோ, வயிற்றிலோ தோல் கோடு போல் சற்றுத் தடித்திருந்தாலும் அந்த ஆணுக்குப் பால் நோய் இருக்கக் கூடும் என்பதைப் பெண் புரிந்து கொள்ளலாம்.''

''குடும்பக் கட்டுப்பாடு முறையில் எது சிறந்தது?''

''பொதுவாகப் பெண்களைச் சமூகம் மதிக்கக் கற்றுக் கொண்டால் கணவனே குடும்பக் கட்டுப்பாடு முறைகளைக் கடைப்பிடிப்பான். மனைவிக்கு வேதனை தரமாட்டான். பெண்கள் எந்தக் குடும்பக் கட்டுப்பாடு முறையைக் கையாண்டாலும் அவர்களுக்கு அதில் சிரமம் இருக்கிறது. சட்டம் அனுமதி தந்தால் கூடப் பெண்கள் கருச்சிதைவு செய்து கொள்வதைக் குறைத்துக் கொள்வது நல்லது.''

## மொழிப் பிரச்னை

நான் வாழ்க்கைப்பட்ட இடம் பாலக்காட்டுக் காரர்கள் என்று சொல்லப்படும் கேரளதமிழர்கள். பம்பாயிலேயே வசித்து வந்தாலும், மலையாள தமிழ்தான் பேசுவார்கள். ஒரு நாள் குடித்தனம் வைத்த புதிதில் வீட்டை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்த என் கணவர் என்னிடம் அந்தச் ''சூலே'' கொண்டு வா என்றார். நான் ஸ்டூலைக் கொண்டு சென்றேன். அவர் இது அல்ல என்று தானே போய் விளக்குமாறை எடுத்து வந்து சுத்தம் செய்ய ஆரம்பித்தார். நான் சமையல் செய்து அப்பொழுதுதான் பழகுகிறேன். ஒரு நாள் அவர் ''என்ன சாம்பாரில் எருவு போட்டிருக்கிறாய்'' என்றார். நான் திடுக்கிட்டேன். சமையல் அவ்வளவாகத் தெரியாது என்றாலும் சாம்பாரில் எருவைப் போடும் அளவு புத்தியில்லாமல் இல்லை எனக்கு என்று நினைத்தேன். நான் கண் கலங்குவதைப் பார்த்து, ''எருவு அதாவது மிளகாய் அதிகம் என்றல்லவா சொன்னேன்'' என்றார். இருவரும் சிரித்து விட்டோம்.

ஒரு நாள் இரவு சமையலுக்குக் கொஞ்சம் கறி புதிதாகச் செய்யட்டுமா என்று கேட்டேன். அதற்கு மாமியார் ''என்னத்துக்கு உனக்கு புத்தி முட்டு'' என்றார். எனக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்துவிட்டது. ''அடி அசடே புத்தி மட்டு அல்ல புத்தி முட்டு. அப்படியென்றால் கஷ்டம் என்று அர்த்தம். உனக்கு ஏன் சிரமம் என்று சொல்லியிருக்கார் அம்மா'' என்றார் என் கணவர். இதெல்லாம் பழங்கதை. இன்று நான் பாலக்காடு தமிழ் பேசுவதாக என் பெற்றோர் கூறுகின்றனர்!

—நளினி

மோபெட்களில் தனி இடம்—அதுவே சுவேகாவின் முதலிடம்.

# சுவேகா: முதன் முதலாக, எளிதாக ஓட்டுவதற்கேற்ற ஆட்டோமாடிக் க்ளட்ச்சைக் கொண்டது.



சுவேகாவை ஓட்டுபவர் க்ளட்ச்சை அவ்வப்பொழுது இயக்க வேண்டியதில்லை! அதுமட்டுமா, அதிக பரப்பினைக் கொண்டுள்ள இந்த வகை க்ளட்ச் சக்கரங்களுக்கு அதிக சக்தியை கியர்களிலிருந்து மாற்றித் தருகின்றது. இதனால் ஸ்லிப் ஆவதென்பது மிகக் குறைவு. அத்துடன் அதிக பளுவையோ அல்லது மற்றொரு நபரையோ எளிதில் சுமந்து செல்கிறது.

இன்னும் பல சிறப்பு அம்சங்கள்:

- செயின் இயக்கம் மற்றும் சிறப்பான சம நிலைத் தன்மைக்கேற்ற உட்புற உறுதியுடன் அமைக்கப்பட்ட பாக்ஸ் பிரிவு ப்ரேம்.
- நீடித்த உழைப்பு மற்றும் அதிக கி.மீ ஓட்டம்—இவற்றை அளிப்பதற்கேற்ற ஹார்டு க்ரோம் அலுமினியக் கலவையினலான சிலிண்டர்கள்.
- உறுப்புகளின் நீடித்த உழைப்பிற்கும், வழ வழப்பாக உருளுவதற்கும் ஏற்ற நீடில் ரோலர் பேரிங்குகள்.

சுவேகா, விற்பனைக்குப் பிறகு பராமரிப்பு சேவைக்கான விரிவான அமைப்பு மற்றும் இந்தியா முழுவதிலும் உறுப்புகள் கிடைக்கும் வசதி கொண்டது.



மோபெட்ஸ் இந்தியா லிமிடெட்

திருப்பதி, ஆந்திரப் பிரதேசம்.

**Suvega**

சுவேகா—தன்னிகரற்ற மோபெடின் மறுபெயர்

SAA/MIL/435

# இல்லத்துக்கு ஓர் எழில் தோற்றம்!



வீட்டுக்குள் எழிலாக ஒரு தோற்றத்தை அமைப்பது ஒரு தனிக் கலை. நம் சுற்றுப்புறம் அழகாக இருந்தால் நமக்கு வேலை செய்வதிலேயே ஒரு சுறுசுறுப்பு இருக்கும். மனத்தில் ஓர் அமைதி இருக்கும். Interior Decoration படித்து டிப்ளமா பெற்றவர் திருமதி அருணா கோபாலகிருஷ்ணன். அவர் சில பயன்படக் கூடிய குறிப்புக்களைத் தருகிறார்.

வீட்டுக்குள் செய்யும் அலங்காரம் என்றால் கீழே விரிப்புக்களைப் போடுவதும் சுவரில் படங்களை மாட்டுவதும் மட்டுமல்ல. நான் படித்த இடத்தில் மூன்று ஆசிரியைகள் போதித்தனர். கட்டிடத்தை எப்படி அமைக்க வேண்டும் என்பதிலிருந்தே ஆரம்பித்து நாங்கள் பயில வேண்டியிருந்தது.

இப்பொழுதெல்லாம் சிறு சிறு அறைகளாகக் கட்டுவதோ, வீட்டுக்குள் நிறைய குறுக்குச் சுவர்கள் எழுப்புவதோ நாகரிகம் இல்லை 'ஸீ த்ரு' (See through) திரைகளைச் சாப்பிடும் இடத்தைப் பிரித்து வைக்கப் போடுவது நாகரிகம். தேவையான இடங்களில் அலங்கார வேலைகள் செய்யப்பட்ட மர ஸ்கிரீன்களையும் வைத்துத் தடுத்துக் கொள்ளலாம்.

சுவரில் தஞ்சாவூர் கண்ணாடி வேலைப்பாடுகளை வைக்கலாம். அறையில் இரண்டு சுவர்கள் சேரும் இடங்களில் மலர் அலங்காரம் செய்யலாம். நாகரிகமான வரவேற்பு அறையில் செய்திப் பத்திரிகைகள் வைக்கவும், சட்டென்று விலாசங்கள் குறித்துக்கொள்ள வசதியும் இருக்க வேண்டும்.

கே: சாப்பிடும் அறை, குழந்தைகள் அறை, சமையல் அறை எப்படி இருக்கவேண்டும் அருணா?

சாப்பிடும் அறையில் தேவையான தட்டுகள், கோப்பைகளை அழகாக வைக்க வழி செய்ய வேண்டும். சாப்பிடும் மேஜையின் நடுவிலோ, அந்த அறையின் மூலைகளிலோ அலங்கரிக்கப்பட்ட மலர் ஜாடிகளை வைக்கலாம். குழந்தைகள் அறையில் அவர்களைக் கவர்வது போல் மிருகங்கள், பறவைகள் படங்களை வைக்கலாம். சமையல் அறையில் வெள்ளை நிறம்தான் இருக்கவேண்டும்.

கே: சுவர்களுக்கு எப்படிப்பட்ட அமைப்பு இப்போது நாகரிகமானது?

வெளி நாடுகளிலிருந்து அழகிய இயற்கைக் காட்சிகள் Wall paper வருகிறது. எப்படி ஒட்டவேண்டும் என்றும் தெளிவாகக் குறிப்பிடுகிறார்கள். இவைகளை ஒட்டியதும் இயற்கைக் காட்சி, கடலோரம், அடர்ந்த காடுகள், பூந்தோட்டம் போன்ற காட்சிகள் நம் வீட்டில் இடம் பெற்று விடுகின்றன. இந்தியா விலும் இவற்றைத் தயாரிக்க ஆரம்பித்துள்ளனர்.

கே: பாமர மக்களுக்கு இந்த அழகுக் கலை வீட்டினுள் செய்யும் அலங்காரம் பயன்படுமா?

கண்டிப்பாகப் பயன்படும். வீட்டைக் கலை உணர்வோடு வைக்க அவர்களுக்கு ஆவல்தான் வேண்டும். தங்களிடம் இருக்கும் பொருட்களைக் கொண்டே செய்யலாம். உதாரணமாக உடைந்த கண்ணாடிப் பொருள்களை நெருப்பில் காட்டி வளைத்துச் சங்கிலியாகச் செய்வது நம் கிராமத்துக்கலை. அதைப் பல மேல் நாட்டினர் விரும்பி வாங்கிக்கொள்கிறார்கள். மக்கள் கலைபாமாக இது போன்று தம் வீட்டை அலங்கரிக்கலாம்.

# அழகியல் நிலையம்

மங்கையருக்கு மிகவும் பிடித்தது அழகியல். ''ஒருத்தி அழகாகத் திகழ முகப் பூச்சும், கண் மையும் உதட்டுப் பூச்சும் மட்டும் போதாது. உணவாலும், உடற்பயிற்சியாலும்தான் அழகு வரும்'' என்கிறார் அழகியல் பட்டம் பெற்ற குமாரி தேவிகாராணி. பி.எஸ்.ஸி. பட்டம் பெற்ற பிறகு அடையாறில் பெண்கள் பாலிடெக்னிக்கில் ஓர் ஆண்டு பயிற்சி பெற்று டிப்ளமா எடுத்துள்ளார்.

இந்தப் பயிற்சியில் வானிஷிங் க்ரீம், முகப் பூச்சுக்கள், பருக்களுக்கான மருந்துகள், பற்பசை, பற்பொடி, நகப் பூச்சுகள், உதட்டுச் சாயம் எல்லாம் தயாரிக்கவும் சொல்லித் தருகிறார்கள்! மேலும் உடல் கூறு சாஸ்திரம், தசைகள், நரம்புகள் போன்றவற்றை அறியும் படிப்பும் உண்டு. இடுப்பு, தொடை, கை போன்றவைகளில் சதை அதிகமாகித் தொங்கினால் அவைகளைச் சீர் செய்ய அங்கு சிகிச்சை தருகிறார்கள். ஒவ்வொரு நாளும் இந்தச் சிகிச்சை முடிந்ததும் ஆவிக் குளியலும் உண்டு. இதனால் உடலில் உள்ள அதிக நீர் எடுக்கப்பட்டு விடுகிறது. ''இந்தப் பயிற்சி எல்லாம் எப்படி அளிப்பது என்ற பயிற்சி எங்களுக்கு அளிக்கப்பட்டது. சிகிச்சை பெறத் தொடங்கினால் தவறாமல் குறிப்பிட்ட நேரத்தில் தினசரி பெற வேண்டும். அப்போதுதான் பலன் இருக்கும்.

''ஒவ்வொருவர் உடல் வாகுக்கும் ஏற்பச் சாப்பிட வேண்டிய உணவு, தேவையான வைட்டமின் இவைகளைப் பற்றியும் எடுத்துக் கூறுவோம். அழகியல் கலையின் அஸ்திவாரமே அதுதான்.

''கை நகத்துக்குச் சாயம் போடுவதானால், நகங்களைச் சீராக வெட்டி, விரல்களை பாங்காக மசாஜ் செய்வோம். பிறகு ஒரு முறை பாலிஷ் போடுவோம். அது காய்ந்தவுடன் இன்னொரு முறை அதன் மேல் போடுவோம். இப்படிச் செய்தால்தான் நகத்துக்குச் சாய மிடும் வேலை முடிந்ததாகும்.

''முகத்தை அவசியமானால் ப்ளீச் செய்வோம். இதனால் முகத்தில் இருக்கும் பருக்கள் மட்டுமின்றிக் கருமையையும் அகற்றிவிடுவோம். எந்தக் காரணத்தைக் கொண்டும் புருவத்துக்குச் சாயம் போடக் கூடாது. இது பல தொல்லைகளில் கொண்டு விடும்'' என்று ஆணித்தரமாகக் கூறினார் தேவிகாராணி.

28, ஆதியப்ப நாயக்கன் தெரு, சென்னை-600001ல் வசிக்கும் குமாரி தேவிகாராணிக்குக் கிட்டத்தட்ட 24 வகை திருமணக் கொண்டை போடத் தெரியுமாம். ரூபாய் பத்திலிருந்து நூற்றிருபது வரை இவர் இதற்கு சார்ஜ் செய்கிறார். மிகச் சாதாரண நிலையில் உள்ளவர்கள் கூடக் குறைந்த செலவில் எடுப்பான திருமணக் கொண்டை போட்டுக் கொள்ளலாம் என்கிறார். ஒரு மணி நேரத்தில் வியத்தகு வகையில் திருமணக் கொண்டை இவர் போட்டு விடுகிறார்.

முகத்தில் சுருக்கங்கள் விழாமல் இருப்பதற்குத் தினசரி காலையில் ஒரு முறை முகத்தை மசாஜ் செய்வது அவசியம். மோவாய்க்கட்டையிலிருந்து மேல் நோக்கி இரண்டு கன்னங்களையும் தேய்க்க வேண்டும். தினசரி காலையில் முகத்தை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாகச் சில முறைகள் திருப்பினால் கழுத்தில் சுருக்கம் ஏற்படாமல் இருக்கும். ஆரோக்கிய உடலே எழிலுக்கு அடிப்படை. ஓர் அழகியல் நிலையம் அமைக்க ரூ. 20,000 தேவைப்படுகிறது.



Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேயக் காசு

# உங்கள் அழகுக்கு அழகூட்டும் குங்குமம்

## புதிய சுமங்கலி டீலக்ஸ் குங்குமம்

இன்று தன் இயற்கை எழிலை எந்த மங்கையும் மேலும் பொலிவுறச் செய்யலாம். உங்கள் ஒப்பனைக்கு மேலும் மெருகூட்டுவது சுமங்கலி குங்குமம்.

கொஞ்சம்கூட வெளியே சிந்தாத சிறந்த பாக்கிங்கில் வரும் குங்குமம் அது ஒன்றே. ஆகவே அது உங்கள் கைப்பையிலோ அல்லது டிரஸ்ஸிங் டேபிள் மேலோ வைத்துக்கொள்ள உகந்தது. சுமங்கலி உங்களுக்குப் பிடித்தமான பலவித வண்ணங்களில் கவர்ச்சியான ஜாடிகளிலும், பௌடர் உருவிலும் மற்றும் டீலக்ஸ் பர்ஸ் பாக்கிங்குகளிலும் கிடைக்கிறது.




டீலக்ஸ் ● குங்குமம்

**சுமங்கலி**

ஒரு கேசவர்த்தினி தயாரிப்பு

OBM 4952